# பொருளடக்கம்


1. மரகத வளரி (1) . . . . . 7
2. மரகத வளரி (2) . . . . . 12
3. மரகத வளரி (3) . . . . . 17
4. மரகத வளரி (4) . . . . . 22
5. மரகத வளரி (5) . . . . . 29
6. மரகத வளரி (6) . . . . . 35
7. மரகத வளரி (7) . . . . . 42
8. மரகத வளரி (8) . . . . . 48
9. மரகத வளரி (9) . . . . . 55
10. மரகத வளரி (10) . . . . . 62
11. மரகத வளரி (11) . . . . . 70
12. மரகத வளரி (12) . . . . . 77
13. மரகத வளரி (13) . . . . . 85
14. மரகத வளரி (14) . . . . . 90

FREETAMILEBOOKS.COM . . . . . 99

கணியம் அறக்கட்டளை . . . . . 106

நன்கொடை . . . . . 110

# 1. மரகத வளரி (1)

மதுரை- திருச்செந்தூர் தேசிய நெடுஞ்சாலையில், கடமை தவறாத ஒரு ஓட்டுநர் மூலம், அந்த அரசு பேருந்து சாலையில் ஊர்ந்து கொண்டிருந்தது.

நடத்துனர் ,ஓட்டுனரை தவிர அனைவரும் அரைத்தூக்கத்தில் இருந்தனர் .

''இலவந்திகைப்பள்ளி யாராச்சும் இறங்கணும....?

'' நடத்துனர் உரக்க கத்த, சபரிராஜன் அரக்கபரக்க பெட்டிகளை எடுத்துக் கொண்டு இறங்க எத்தனித்தான், மற்ற பயணிகள் நமக்கில்லை என்று மீண்டும் உறக்கத்தில் ஆழ்ந்தனர். பேருந்து ஒருநிமிடம் நிற்க, அவன் மாத்திரமே இளவந்திகைப்பள்ளியில் இறங்கினான் .

இலவந்திகைப்பள்ளி தங்களை அன்புடன் வரவேற்கிறது என்ற பெயர் பலகை அவனை வரவேற்றது. இலவந்திகைப் பள்ளி, புதுக்கோட்டை சமஸ்தானத்தின் ஆளுகையின் கீழிருந்த, ஒரு ஜமீன் ஆகும்.

இருளும் அதிகாலை நேர குளிர்ந்த காற்றும், அவன் முகத்தில் அறைய அந்த போர்டு காட்டிய திசையில் மெல்ல இருளில் நடக்கத் தொடங்கினான்.சாலை குண்டும் குழியுமாக இருந்தது, அவன் நடக்க நடக்க சாலை முன்னோக்கி நீள அவனுடைய எண்ணங்கள், பின்னோக்கி நின்றது.அவன் தொல்லியல் துறையில் பட்டம் பெற்ற பட்டதாரி, நடுத்தர குடும்பம்,அவன் வேலையில் சேர்ந்த சில மாதங்களிலேயே அவனுடைய தந்தை சிவலோகப் பதவியை அடைய, குடும்பப் பொறுப்பை சுமக்க வேண்டிய கட்டாயம், சாலையில் இருந்த பெரிய சைஸ் ஜல்லி அவன் காலை பதம் பார்க்க, 'ஐயோ என்று காலை உதறினான்.சுற்றும் முற்றும் யாரேனும் இருப்பார்களோ என்று கவனித்தான்.

“என்னடா ஊரு இது .....?,ஒரு மனுஷன கூட காணோமே?”அவன் தனக்குத்தானே பேசியபடி,மீண்டும் நடக்க ஆரம்பித்தான். தெருவிளக்குகள் தலையெழுத்தே என்று எரிந்து கொண்டிருக்க, தூரத்தில் ஒரு உருவம் அசைவது, அவனுக்கு தென்பட்டது, அவனும் அந்த உருவமும் நேர்க்கோட்டில் நடக்க நடக்க, பெட்ரோல் விலை போல் மனம் எகிறி குதித்தது. இதமாக வீசிய குளிர்ந்த காற்றையும் தாண்டி அவனுக்கு வேர்வை அருவியாய் சுரக்க ,அந்த உருவம் அவன் அருகில் வந்து நின்று

“ஊருக்கு புதுசா.....?” என்றது .அவன் கண்களால் அந்த உருவத்திற்கு கால் இருக்கிறதா என்று துலாவிப்படியே தலையசைத்தான் .அந்த உருவம் உரக்க சிரித்தபடி

*“என்ன தம்பி என்ன பேயினு நினைச்சியா .....?”என்று கேட்டது. அவன் இல்லை என்று மறுத்தான்.*

*“நானும் உன்ன மாதிரி மனுஷன் தான்”கூறிவிட்டு ஒரு சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டு மெல்ல நகர்ந்தான்.*

*இயற்கை அழைப்பின் காரணமாய் சபரி, சுருட்டு பிடித்துக் கொண்டு நடந்து சென்றவனிடம்,*

*“அண்ணே இங்க பப்ளிக் டாய்லெட் ஏதாச்சும் இருக்கா ....?”என்று சற்று உரக்க கேட்டான்.*

*சுருட்டு பிடித்துக் கொண்டிருந்தவன் தலையில் அடித்துக்கொண்டு,*

*“இப்டிக்கா நேரா போ ஒரு கம்மாக்கரை வரும்” என்றான். சபரி*

*இயற்கை அழைப்பின் அவசரம்,காரணமாய் கொண்டு வந்த பெட்டியை அங்கேயே விட்டுவிட்டு, சுருட்டு பிடித்துக் கொண்டிருந்தவன் கைகாட்டிய திசையில் இறங்கி ஓட தொடங்கினான்.*

*பதினைந்து நிமிடத்திற்கு பிறகு சபரி மீண்டும் அதே இடத்துக்கு வந்தான்.தன் பெட்டியை காணாது, பரிதவித்து அங்குமிங்கும் ஓடினான். சில மனிதர்கள் நடந்தும் சைக்கிளிலும் சென்றுகொண்டிந்தனர்.பொழுது புலர்ந்து கிழக்கில் சூரியன் தலைகாட்டிய தைரியத்தில், பச்சி பறவைகள்,*

*”உலகம் பிறந்தது எனக்காக*

*ஓடும் நதிகளும் எனக்காக ”என்று தங்கள் மொழியில் பாடி பரக்க ஆரம்பித்தன .*

*சபரி சாலையில் சீரான வேகத்தில் நடந்து கொண்டிருந்த ஒருவரை மறித்து,*

*“சார்......இங்கே ஒரு பெட்டி இருந்துச்சி பக்கத்தில ஒரு ஆளு இருந்தாரு” .என்று விசாரித்தான் .*

*“பேட்டியா..? ஆளா....? யாரை சொல்ற”.*

*சாலையில் நடந்து சென்று கொண்டிருந்தவர் எதுவும் புரியாது கேட்க,*

*“கொஞ்சம் ஒல்லியா தாடி மீசையோட சுருட்டு புடிச்சுக்கிட்டு, தலையோட வெள்ளைத் துணியைப் போர்த்திக்கிட்டு நின்றிருந்தாரு” சபரி விளக்கினான் .*

*“நம்ப சுருட்ட இருக்கும் ,நெற போனேனா ஒரு டீக்கடை வரும் அங்கதா இருக்கான் பாரு” என்று சபரிக்கு அவர் பதில் அளித்து விட்டு தன் வழியில் நடந்தார்.*

*“சுருட்டா.....!”தன் பொட்டி பத்திரமாய் இருக்குமா என்ற கேள்வியோடு, சபரி அந்த நபர் காண்பித்த திசையில் டீக்கடையை நோக்கி ஓடினான்.இரண்டு நிமிட,ஓட்டத்திற்கு பிறகு டீக்கடை*

பெஞ்சில் சுருட்டையும் அவனருகில் பெட்டியையும் கண்டான்.

இவனைக் கண்டதும் சுருட்டு,

"என்ன தம்பி போட்டியோட, ஓடிப் போயிட்டான்னு நினைச்சியா .....?"கேட்டுவிட்டு அதிர்ந்து சிரித்தான்.

சபரி சுவாசத்தை சீர் படுத்திக் கொண்டு

"அப்படிலாம் இல்ல" என்றான் .

"ம்ம.....உன் மூஞ்ச பார்த்தாலே தெரியுது" சுருட்டு கூறிவிட்டு டீ கடை காரனிடம் திரும்பி,

"கன்னி .....தம்பிக்கு ஒரு ஸ்ட்ராங் டீ"என்றான்.

"தம்பி பேர் என்ன ....?"சுருட்டு கேட்டான்.

"என் பேரு சபரி"சபரி சுருட்டு க்கு பதில் அளித்துவிட்டு, இவனை நம்பலாமா? வேண்டாமா? என்ற யோசனையோடு அமர்ந்திருந்தான்.

"என்ன சோலியா இந்தப்பக்கம் ....?"சுருட்டு மீண்டும் கேட்டான் .

டீ கடைக்காரன், டீயைச் சபரிடம் நீட்ட அவன் பெற்றுக் கொண்டபடியே,

"இங்க சின்ன மாரப்ப முதலி ஜமீனுக்கு வேலைக்கு வந்து இருக்கேன்." என்றான்.

"எந்த ஊரிலிருந்து வர....?"சுருட்டு கேட்டன்.

"சென்னை"என்று விட்டு சபரி டீ குடித்து முடிக்க, டீ கடைக்காரன் சபரிடம் ஐம்பது ரூபாய் கேட்டான் .

"என்ன ஒரு....ட்டி அம்பது ரூபாவா...?"சபரி விலா எலும்பு தெரிய வாய்ப்பிளந்தான்.

"சார் ஒரு டீ அம்பது ரூபா இல்ல,சுருட்டு குடிச்ச டீ, வாங்கிட்டு போனா சுருட்டு எல்லாத்தையும் சேத்து சொல்றேன்"என்று டீக்கடைக்காரர் சொன்னான் .

சபரி கோபத்தோடு, சுருட்டை பார்த்துவிட்டு டீ கடை காரனிடம் ஒரு அம்பது ரூபாய் தாளை எடுத்து கொடுத்தான்.

சபரி தன் பெட்டியை தள்ளி கொண்டு அமைதியாய் ஊரைப் பார்த்து நடக்கத் தொடங்கினான். சுருட்டும் அவன் பின்னால் வந்து,

“தம்பிக்கு என் மேல கோவமா ....?”என்று கேட்டான். சபரி சற்றுநேரம் அமைதியா இருந்தான்.

“உங்களுக்கு ஜமீன் பங்களா எங்க இருக்குன்னு தெரியுமா .....?”சபரி சுருட்டிடம் கேட்டான் .

“இந்த ஊர்லயே பொறந்து வளந்தவனுக்கு ஜமீன் பங்களா தெரியாத, வாங்க கூட்டு போற”சுருட்டு சொன்னான்.

“உங்க பேர் என்ன ரொம்ப வித்தியாசமா சுருட்டி வச்சிருக்கீங்க ...?”சபரி கேட்டான்

“அட நீங்க வேற தம்பி, இந்த ஊர்ல நான் ஒருத்தன்தான் சுருட்டு குடிப்பேன் ..... டீக்கடைக்கார என் ஒருத்தருக்காக மட்டும்தான் சுருட்டு வாங்கிட்டு வந்து விப்பான் ,அதான் இந்த ஊர் பயலுக எல்லாம் அதே பேரு எனக்கு வச்சுட்டாங்க, என் நேச பேரு கனகரத்தினம்”சுருட்டு தன் பெயர் காரணத்தை விளக்கி முடித்தான்.அவர்கள் பேசியபடியே மெல்ல ஜமீன் பங்களாவை நோக்கி முன்னேறினர்.

“ஜமீன் பங்களா ல உங்களுக்கு என்ன சோல்லி...?”சுருட்டு கேட்டான்.

“ஜமீன் பங்களால்ல ஒரு மியூசியம் இருக்குல்ல அத பார்த்துக்கர வேலை”சபரி கூறினான்.

“பெரிய படிப்பெல்லாம் படிச்சிருக்கீங்களா ...?”சுருட்டு கேட்க, சபரி ஆம் என்பது போல் தலையசைத்தான்.

“ஆமா நீங்க என்ன வேலை செய்றீங்க ...?”சபரி, சுருட்டிடம் கேட்டான்.

“ரெண்டு எருமமாடு, கொஞ்சம் வீட்டை சுத்தி நெலம் இருக்கு, அப்படியே காய்கறி தோட்டம் எல்லாம் போட்டு ஒரு மாதிரி ஓடிட்டு இருக்கு.”சுருட்டின் குரலில் எக்கச்சக்க வருத்தம்.

ஜமீன் பங்களா வரவே, சுருட்டு

“தம்பி இதுதான் ஜமீன் பங்களா,நீ போய் பாரு, நா வூட்டுக்கு போறேன் .”கூறிவிட்டு வீட்டை நோக்கி நடந்தான்.

சபரியை ஜமீன் பங்களாவின் பிரம்மாண்டமான கேட் வரவேற்றது. கேட்டில் கைவைத்து அவன் திறக்க முயல,

எங்கிருந்தோ வேகமாக ஒரு கருடன் வந்து அவன் தலைக்கு மேல் வட்டம் அடித்தது, அந்த கருடனின் வரவும் வேகமும் சபரிக்கு சற்று திகிலூட்டியது.அந்த ஜமீன் பங்களா அமைந்திருந்த, தெருவின் ஒரு மூலையில் படுத்து உறங்கிக் கொண்டிருந்த, ஒரு பிச்சைக்கார கிழவன் அவனைப்பார்த்து,

*“சாமி… வந்துட்டியா ராசா ….”என்று தலைக்குமேல் கைகுவித்து வணங்கியபடி அவனை நோக்கி ஓடிவந்தான்.*

*ஜமீனில் இருந்து அழகு தேவதை அவனை நோக்கி வர,*

*“வேலைக்கு வந்து இருக்கேன்.”என்றான் சபரி*

*” ஜமீன்ல சொன்னாங்க…., உள்ள வாங்க” அந்தப் பெண் கூறிய படியே கேட்டை திறந்து அவனை உள்ளே அழைத்துக் கொண்டு நடக்கத் தொடங்கினாள். ஓடிவந்த பிச்சைக்காரன், அவர்கள் ஜமீனுக்குள் நுழைவதை பார்த்து ,*

*“ஐயோ ராசா ……,நா இப்ப என்ன செய்வ….!?”என்று அலறியபடியே, ஜமீனை சுற்றிக்கொண்டு எங்கேயோ ஓடினான்.*

**தொடரும்…**

## 2. மரகத வளரி (2)

*உதய் கிருஷ்ணா, தன்னுடைய லேப்டாப்பில் முழுகி இருந்தான். கிபி 1686 ல் , புதுக்கோட்டை சமஸ்தானத்தை உருவாக்கிய, புதுக்கோட்டையின் முதல் மன்னரான ரகுநாதராய தொண்டைமான், மரபில் வழிவந்த. இராயரகுநாத தொண்டைமான் (1769 – 1789){.underline}] மன்னனிடம் சாதாரண குதிரை வீரனாக பணியில் சேர்ந்து, தன்னுடைய திறமையாலும் போர் அறிவாலும் வளரி வீசும் ஆற்றலாலும் குதிரைப் படை தளபதியாக பதவிஉயர்வு பெற்ற இடும்ப வீர மறவன், விசுவாசத்தால் ஜமின் அந்தஸ்து பெற்று, இலவந்திகைப் பள்ளியில் கோலோச்சியவர்.இடும்பன் தன்னுடைய பாட்டன் பெயரில்* ***சின்ன மாரப்ப முதலில் ஜமீன்*** *' என்ற அரண்மனையை கட்டி புதுக்கோட்டை சமஸ்தானத்திற்கு விசுவாசமாக ஆட்சி செய்து வந்த குறுநில மன்னன்.*

*அந்தப் பரம்பரையில் வந்த இளவரசன் தான் உதய் கிருஷ்ணா, இளவரசருக்ரிய ,ஜமினுக்குரிய எந்த அலட்டலும் இல்லாமல்,வளர்ந்திருந்தான்.*

*சபரி வழிகாட்டி அழைத்துச் சென்ற தேவதையின் அழகில், சற்று சொக்கிப் போய் இருந்தான்.*

*முகப்பில் விஸ்தாரமான தோட்டம், மூன்று ஆடிக் கார்கள், மைதானம் போன்று முற்றம், முற்றத்தைக் கடந்து, நவீன மின் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்த அற்புதமான கூடம், அவற்றை அலங்கரிக்கும், பழைய கால ஓவியங்கள், பாவை விளக்குகள், தேக்கு மரத்தலான பிரம்மாண்ட ஊஞ்சல், இராய ரகுநாத தொண்டைமானின் ஓவியம், வீரர் சின்னமாரப்பரின் ஓவியம், இடும்ப வீரமறவறின் ஓவியம் இவற்றின் அழகை ரசிக்கத் தவறிய சபரி, அப்படியே அவள் பின் மந்திர கட்டில் கட்டுண்ட பதுமையாய் சென்றுகொண்டிருந்தான்.*

*“ஹலோ மிஸ்டர் சபரி……பிரயாணம் எல்லாம் சௌக்கியமா இருந்ததா…? ஏன் இவ்வளவு லேட்டு ….?” உதய் சபரியிடம் கேட்டான் .*

*உதய்யின் கேள்விகள், அவனை உசுப்ப,*

*“ஆமா சார் சௌக்கியமா வந்துட்டேன்”சபரி ,சற்று சுதாரித்து பதில் சொன்னான்.*

*“ஏ….லேட் நெத்திக்கே வரத சொல்லி இருந்திங்க…?”உதய் மீண்டும் கேட்டான்.*

*“இல்ல சார் பஸ் கிடைக்கல அதான்.”சபரி பதில் கூறினான்.*

*“கார்ல வந்திருக்கலாமே ….”உதய் வியப்பாய் கேட்டான்.*

“இல்ல சார் என்கிட்ட அவ்வளவு வசதி இல்லை.”சபரி சற்று வருத்தத்தோடு சொன்னான்.

“ஓ……டிராவல்ஸ்ஸல கார் புக் பண்ணி நீங்க வந்துட்டு என்கிட்ட சொல்லி இருந்தா, நா பேப் பண்ணி இருக்க போறேன்”உதய் கூறினான்.

“இல்ல சார் அந்த காசிருந்தா வீட்டுக்கு அனுப்புவேன், நிறைய கடன் இருக்கு.”சபரி வருத்தத்தோடு கூறினான்.

தலையசைத்த உதய்,

“ரோஜா சார கெஸ்ட் ரூமுக்கு கூட்டிட்டு போ.”உதய்( ரோஜாவிற்கு )சபரியை மெயின் கேட்டிலிருந்து அரண்மனைக்குள் அழைத்து வந்த பெண்ணிற்கு கட்டளையிட்டான்.

“ஓகே சபரி நீங்க போய் ரெஸ்ட் எடுங்க, சாப்பிடுங்க நிதானமா, மீட் பண்ணலாம் .”கூறிவிட்டு உதய் உள்ளே நடந்தான்.

“ஓ…… இந்த தேவதையின் பெயர் ரோஜாவா ….?”மனதிற்குள் எண்ணியவாறே சபரி அவள் பின்னால் நடந்தான்.

“ஏங்க உங்க பேர் ரோஜாவா நீங்க யாரு …..?”சபரி தயங்கியவாறு அவளிடம் கேட்டான்.

“ஜமீன் சொன்னது கேட்டதில்ல,குளிச்சி, சாப்பிட்டு, ரெஸ்ட் எடுங்க”ரோஜா அலட்சியமாய் கூறிவிட்டு, வேகமாய் முன்னேறினாள்.இரண்டு நிமிட நடைக்கு பிறகு,

“இதான் உங்க ரூம், அங்க தெரியுதே ஒரு பில்டிங் அதுதான் மியூசியம், குளிச்சு சாப்பிட்டு ரெஸ்ட் எடுங்க எப்ப வேணாலும் ஜமீன் கூப்பிடுவாரு”ரோஜா கட்டளையிடுவது போல் கூறிவிட்டு வெளியேறினாள்.

அவள் உருவம் மறையும் வரை அவளையே பார்த்துக் கொண்டிருந்த சபரி, எதார்த்தமாய் அறையைப் பார்த்தான்.செய்வதறியாது வாய்பிளந்து ஒரு நிமிடம் அப்படியே நின்று விட்டான்.

“இது நா தங்கப் போர ரூமா ….?”சபரி வாய்விட்டே அலறினான்.ஐந்து நட்சத்திர விடுதியில் அளிக்கப்படும் அறையை விட இரண்டு மடங்கு பெரிதாய் இருந்தது. அவ்வளவு நவீன வசதிகளுடன் கூடிய அற்புதமான அறை,அவன் சென்னையில் கிளம்பும் பொழுது இது மாதிரி ஒரு அறையில் தங்க போகிறோம் என்று கனவிலும் எண்ணவில்லை.

” இந்த ஒத்த அறையில மூன்று டபுள் பெட்ரூம் பிளாட் கட்டலாம் போல” என்று அவனுக்கு தோன்றியது.சென்னையில் அடுக்குமாடி குடியிருப்பில் காற்று வெளிச்சம் இன்றி, சின்ன

சந்தில், சின்ன அறையில் வாழ்ந்த அவனுக்கு அந்த அறை வியப்பு, பிரமிப்பு,ஆனந்தம் இன்னும் வர்ணிக்க இயலாத பல மனநிலைகளை அடுத்தடுத்து கொடுத்தன.முழு

அரண்மனையின் விஸ்தாரத்தை, அவன் கண்டால், அல்லது உள் நுழையும் பொழுது ரோஜாவை கவனிக்காமல் அரண்மனையை கவனித்திருந்தால், அவன் நிச்சயம் மயங்கி விழுந்து இருப்பான்.

அவன் சற்று நேரம் இளைப்பாறி குளித்து தயாராக, ரோஜா தட்டில் உணவோடு வந்தாள்.

“டிபன், சாப்பிட்டு முடிச்சிட்டு ஜமீன் வர சொன்னாரு”ரோஜாக கூறிவிட்டு நகர, சபரி ஆர்வமாய் தட்டை திறந்து பார்த்தான்.அதில் கோதுமை ரவை உப்புமாவும் தேங்காய் சட்னியும் இருக்க, சபரியின் முகம் சுருங்கியது.

“ஹலோ அரண்மனை பெருசா இருக்கு, சாப்பாடு மட்டும் கோதுமை ரவ உப்பும கொடுக்குறீங்க ...?”சபரி சற்று கடுப்போடு கேட்டான்.

“ஓசி சாப்பாட்டுக்கு, இதுவே ஜாஸ்தி சீக்கிரம் சாப்பிட்டு வாங்க .”ரோஜா முகத்தில் அறைந்தாற்போல் கூறி விட்டு வெளியேறினாள்.

சபரி இரண்டு வாய் சாப்பிட, இதுவரை உணராத அளவிற்கு கோதுமை ரவ உப்புமா அவ்வளவு ருசியாக இருந்தது. தேங்காய்ச் சட்னியும் விசேஷ சுவையோடு அற்புதமாய் இருந்தது. 'ஜமீன் சாப்பாடு ஜமீன் சாப்பாடுதான் சூப்பர்.மனதிற்குள் எண்ணியவாறு ரசித்து உண்டு முடித்தான்.

மணி, பத்தை காட்ட, அறையை விட்டு வெளியே வந்து , மியூசியம் என்று ரோஜா சொன்ன கட்டிடத்தை நோட்டம் விட்டான்.

“தம்பி.... ஜமீன் உங்களை கூப்பிடுறாரு”வயதான பெண் வந்து அவனை அழைக்க, அவன், உதய் கிருஷ்ணாவை காண விரைந்தான்.

“சபரி சாப்டீங்களா ....?”உதய் கேட்டான்.

“சாப்பட்ட சார் .....”சபரி சொன்னான்.

“சாப்பாடு ஓகேவா,ரூம் வசதியா இருக்கா ...?”உதய் மீண்டும் கேட்டான்.

“டிபன் ரொம்ப நல்லா இருந்தது. ரூம் பைவ் ஸ்டார் ஹோட்டல் ரேஞ்சுக்கு இருக்கும். ”சபரி மிகுந்த உற்சாகத்தோடு கூறினான்.

“குட் .....”சபரி கூறியதை கேட்டு சிரித்தபடியே உதய் முன்னே நடக்க, அவனை அழைத்து வந்த வயதான பெண், உதய்யின் பின்னால் நடந்தபடியே இவனுக்கு வா என்று சைகை செய்தாள்.

பத்து நிமிட நடையில் மூவரும் மியூசியத்தை அடைந்தனர் .உதய் மியூசியத்தின் பிரம்மாண்ட கதவுகளை சற்று சிரமப்பட்டு திறந்தான்.

அந்த வயதான பெண் வாசலிலேயே நிற்க உதயும் சபரியும் உள்ளே நுழைந்தனர்.சபரி,

கூர்மழுங்கிய அருவாளும் வேல் கம்பும் கத்தியும் இறந்துபோன சிங்கம்,புலி தலைகளும் இருக்குமென்று எண்ணி வந்தான். ஆனால், அரசு அருங்காட்சியகத்தை மிஞ்சும் அளவுக்கு, அவ்வளவு புராதன பொருட்கள்,முத்து, பவளம் ,கோமேதகம், புஷ்பராகம் என்று நவரத்தினங்களில் விதவிதமான கைவினை பொருட்கள், யானைத் தந்தங்கள், ஐம்பொன் சிலைகள், அவர்களின் பரம்பரையில் வந்த வீரர்களின் ஓவியங்கள். சபரி பேச்சற்று நிற்க,

"இதெல்லாம் [200.. 300] வருஷத்துக்கு முன்னாடி சீனாலேந்தும் பர்மாலேந்தும் தாய்லாந்திலேந்தும் இருந்து வந்தது, எங்க பரம்பரையில நிறைய, கலை ஆர்வம், கலாச்சார ஆர்வம் உண்டு. பல நாட்டு கலை கலாச்சாரங்களை சேகரித்து பத்திரப்படுத்தி இருக்கோம்."என்று உதய் சபரிடம் கூறியபடியே, ஓரிடத்தில் தேங்கி நின்றான்.

ஏற்கனவே பிரமிப்பில் உறைந்து போயிருந்த சபரி, உதய் நின்ற இடத்தை நோக்கி மீண்டும் பிரமித்தான் .அங்கு கிட்டத்திட்ட நூற்றுக்கணக்கில் வளரிகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. வளரி அவன் கல்லூரியில் தொல்லியல் பாடப்புத்தகத்தில் மட்டுமே படித்த ஒரு போர்க் கருவி, தமிழர்களின் வீரத்துக்கு, போர் திறனுக்கு மிகப்பெரிய சான்று. உதய் சற்று நேரம் மௌனம் காத்து,

"எங்களுக்கு ஜமீன் அந்தஸ்து வாங்கி கொடுத்த, தெய்வம் மத்தவங்களுக்கு இது ஒரு போர் கருவியாக இருக்கலாம், எங்களைப் பொறுத்தவரைக்கும் இது குலதெய்வம் மாதிரி."வேறு ஏதோ சொல்ல வாய் எடுத்தவன் அப்படியே நிறுத்தி,

"சபரி மியூசியத்த நல்ல மெதுவா சுத்திப் பாருங்க, நல்லா அனலைஸ் பண்ணிடுவாங்க, உங்ககிட்ட சில முக்கியமான விஷயங்கள் டிஸ்கஸ் பண்ண வேண்டி இருக்கு, இந்தாங்க சாவி ரெண்டு நாள் டைம் எடுத்துக்கோங்க."உதய், சபரியின் கையில் சாவியை திணித்து விட்டு வெளியேறினான் .

சபரி, வளரியை கண்ட பிரமிப்பிலிருந்து மீளதவனாய்யிருக்க,உதய் வேறு ஏதோ ஆலோசிக்க வேண்டும் என்று கூறி சென்றது,அவனுக்கு, மனதில் திகிலையும் பயத்தையும் கிளப்பின.

சபரியை கண்டு ஓடிய அந்த பிச்சைக்காரன், ஊர் எல்லையைத் தாண்டி அமைந்திருந்த ஒரு பருத்த ஆலமரத்தின் முன்பாக நின்றான். சற்று நேரம் நின்று சுதாரித்து,அக்கம் பக்கம் பார்த்தான். யாரும் இல்லை என்பதை நிச்சயித்துக் கொண்டு, மரத்தை சுற்றிக்கொண்டு பின்னால் வந்து, அந்த,

மரத்தின் விழுதுகளையும் பட்டங்களையும் லேசாக விலக்கி மரத்தின்னுள்ளே இறங்கி நடக்கத் தொடங்கினான். ஆம் நீங்கள் எண்ணுவது மிகச் சரி அது சுரங்கப்பாதை தான் .

**தொடரும்** ……..

## 3. மரகத வளரி (3)

அந்த பிச்சைக்காரன் இறங்கி நடக்க, சற்று தூரத்தில், ஒளி மங்கி இருள் சூழ்ந்தது, உள்ளே குளிர், வெப்பம் இரண்டும் சரிசமமாய் நிலவின.அவன் இடையில் மறைத்து வைத்திருந்த தீப்பெட்டியை எடுத்து, பாதையின் ஓரத்தில் கிடந்த ஒரு புல்லை எடுத்து பற்றவைத்து அதன் ஒளியில் நடக்கத் தொடங்கினான் அது, ஆயிரம் வாட்ஸ் பல்பை விட அதிகமான பிரகாசத்தை அளித்தது.

ஆயிரம் சூரியனின் பிரகாசத்தோடு, தாடி, மீசை இடுங்கிய கண்களுடன் ஒரு பெரியவர் கண்மூடி அமர்ந்திருந்தார். அந்த பிச்சைக்காரன் அவர் முன்பாக சென்று நின்றான்.
அவர் கண்களை திறக்காமலேயே,

" வேலா எப்படி இருக்க ....?"என்று தேன் தடவிய குரலில் கேட்டார்.

"சா..ம்மி ரொம்ப நல்லா இருக்க "வேலன் கூறிய படியே மரியாதையோடு வணங்கினான்.

அந்தப் பெரியவர் மெல்ல தன் கண்களைத் திறந்து வேலனை ஆசீர்வதித்தார் .

"சாமி நீங்க சொன்ன மாதிரியே கருடன், ஒரு கட்டுமஸ்தான வாலிபன் தலைமேலே சீறிப்பாய்ஞ்சீ வட்டமடிச்சீது சாமி ."வேலன் மிகப் பணிவாய் சொன்னான்.

"எனக்கு தெரியும் வேலா, நேரமும் காலமும் கனிஞ்சீ வரப்போகுது, ஜமீன் எதிர்பார்த்துட்டு இருக்கர அதுவும் வெளியில வரப்போகுது."சாமி கூறினார்.

"சாமி இனிமே நா என்ன பண்ணம்"வேலன் கேட்டான்.

"நீ எப்பயும் போல உன் வேலையை பாத்துக்கிட்டு பிச்சைக்கார தோற்றத்திலேயே திரி"சாமி கூறினார்.

வேலனின் தயக்கம் கண்டு,

"என்ன.... எதுக்கு இன்னும் பிச்சைக்காரனாக சுத்தணும் கேக்கறியா .....?!"சாமி கேட்டார்.

வேலன் தயக்கத்தோடு தலையசைத்தான்.

"நேரம் கனிஞ்சீ வரப்போகுதுன்னு சொன்னேனே தவிர வந்துடுச்சுன்னு சொல்லல, அதுமட்டுமில்ல அவனுக்குத் தான் யாருன்னு தெரியாது ,நிறைய தடுமாற்றங்களும் பிரச்சனைகளும் அவனுக்கு வரும், ஜமினோட வாரிசுகள் ஆபத்தில இருக்கு, ராணியம்மவோட உசுரு ஊசலாடிக்கிட்டு

இருக்கு. உன்னையும் என்னையும் இன்னும் சில காலம் பொறுத்து இருக்கும்படி என்னோட குருநாதர் உத்தரவு போட்டிருக்காரு. நா எப்பவுமே என் குருநாதர் பேச்சை மீறினது கிடையாது.''சாமி நிறுத்திவிட்டு நீ எப்படி என்பது போல் அவனை கூர்ந்து பார்த்தார்.

வேலன் அப்படியே சாஷ்டாங்கமாக அவர் காலில் விழுந்து வணங்கி, எழுந்து நின்றான்.

சாமி, வேலனின் கைகளைப் பிடித்தபடி நடந்து, வெளியே வந்து ,சூரியனை வணங்கி தெற்கு திசை நோக்கி நடந்தார், இரண்டு மூன்று கொடிகளை சேகரித்துக் கொண்டார், மீண்டும் வடக்கு திசை நோக்கி நடந்தார், ஏதோ சில மரத்தின் இலைகளை உற்று உற்றுப் பார்த்து சேகரித்துக் கொண்டார். அங்கும் இங்கும் எதையோ தேடி ஒரு கொட்டாங்கச்சியை எடுத்தார், மீண்டும் வேலனின் கைகளைப் பிடித்துக்கொண்டு, மரத்தினுள் இறங்கி நடந்தார், வேலன் கொளுத்திப் போட்ட புல் இன்னுமும் பிரகாசத்தோடு எரிந்துகொண்டிருந்தது, அவர் தான் சேகரித்த கொடிகளையும் இலைகளையும் ஒன்று சேர்த்து கொட்டாங்கச்சியில் கசக்கி பிழிந்து,

''வேலா இத, நாளைக்கு சூரிய அஸ்தமனத்துக்குள்ள ராணி அம்மாக்கு கொடுத்துடு''என்று சாமி ,வேலனுக்கு கட்டளையிட்டார். வேலன் பெற்றுக்கொண்டு வெளியேற, சாமி

''சிவாய நம ஓம் சிவாய நம ஓம்''என்று கூறியபடியே மீண்டும் தியானத்தில் ஆழ்ந்தார்.

வேலனுடைய கால்கள் தன்னிச்சையாக நடக்க, மனம் மட்டும்

குழப்பத்தில் ஆழ்ந்தது.

**உதய் கிருஷ்ணா மட்டும்தானே ஜமீனுடைய வாரிசு, சாமி வாரிசுகள் என்று சொன்னாரே....!,ராணியம்மா நேற்று கூட நன்றாகத்தானே கோவிலுக்குள் நடந்து சென்றார். அதற்குள் ராணியம்மாவின் உயிருக்கு என்ன ஆபத்து நிகழ போகிறது ....?** என்று குழப்பமான மனநிலையுடன் வேலன் வீதியில் நடந்து கொண்டு இருந்தான்.

''வேலா ரொம்ப குழப்பிக்காத சொன்னதை மட்டும் செய்''வேலனின் மனதிற்குள் சாமியின் குரல் தெளிவாய், கேட்டது.

''எல்லாத்தையும் சாமியே பாத்துப்பாரு'' என்று தனக்குத்தானே கூறியபடி வேலன் எட்டி நடை போட்டான்.

வளரியை கையில் தொட்ட சபரிக்கு, இனம் புரியாத ஒரு பரவசம் தோன்றியது. அவன் வளரியை கையில் எடுத்து லாவகமாக சுழற்றினான்.வளரியை கையில் வைத்துக்கொண்டு அவன் நின்ற விதம், சுவரில் ஓவியமாக , வீர வளரி ஏந்தி நின்றிருந்த '**வீர வாள்ளொலி** சாயலை ஒத்திருந்தது.வீர வாள்ளொலி,

உதய் கிருஷ்ணாவின் தாத்தாவின் தந்தை அதிவீர வச்சிரபாகுவின் மெய்க்காப்பாளன்,மற்றும் உற்ற நண்பனும் ஆவன்.வளரியை கையில் பிடித்தபடி பரவச நிலையில் இருந்த சபரியின் காதுகளில், அழுகுரல் கேட்க, மியூசியத்தை அவசரமாய் பூட்டிக்கொண்டு, முற்றத்துக்கு வந்தான்.

“என்னாச்சு ....?”முற்றத்தில் ஓரமாக நின்றிருந்த ரோஜாவிடம் சபரி மெல்ல கேட்டான்.

“ராணி அம்மா மயங்கி விழுந்துட்டாங்க.” ரோஜா கூறினாள்.

“ராணி அம்மான யாரு .....?”சபரி, சபரி ரோஜாவிடம் கேட்டுக்கொண்டே இருக்கும் பொழுது, உதய் கிருஷ்ணா மற்றும் அவனுடைய மனைவி நிகிலா, ராணி அம்மா என்று அழைக்கப்படும், கார்குழல் கோதையை கைத்தாங்கலாய் பிடித்து காரில் ஏற்றுக் கொண்டிருந்தனர்.

” ஓ…… நீ இன்னும் போயி ராணி அம்மாவுக்கு மரியாதை செலுத்தலய....? ” ரோஜா இளக்காரமா கேட்டாள்.

” ஆமா அவங்க யாரு.....? ” சபரி மீண்டும் கேட்டான்.

” அவங்க உதய் கிருஷ்ணா அம்மா ” ரோஜா பதிலலித்தாள்.

ரோஜா, உதய் கிருஷ்ணாவை மரியாதையையற்றுக் கூறியது சபரிக்கு சற்று நெருடலாக இருந்தது.

சற்று நேரத்தில் ரோஜா தன் வேலையை பார்க்க போய் விட்டாள்,சபரி மட்டும் அங்கு நின்று என்ன செய்ய ,அவன் மீண்டும் மியூசியத்தை நோக்கி நடந்தான்.

மூன்று மணி நேரத்திற்கு பிறகு உதய் கிருஷ்ணாவும் நிகிலாகவும் திரும்பி வந்தனர்.மதிய உணவு உண்டு இளைப்பாறிக் கொண்டிருந்த சபரி, உதய கிருஷ்ணா மற்றும் நிகிலா வருவதை அறிந்து, ராணி அம்மாவின் உடல் நலம் விசாரிக்க விரைந்தான்.

“சார் ராணி அம்மாவுக்கு எப்படி இருக்கு”சபரி வருத்தமான குரலுடன் உதய்யிடம் கேட்டான்.

“இப்ப பரவாயில்ல”உதய் கிருஷ்ணா சுரத்தில்லாத குரலில் கூறி விட்டு உள்ளே போய் விட்டான்.

நிகிலா நின்று நிதானித்து அவனைப்பார்த்து ஏளனப் புன்னகை வீசிப்படியே நடந்தாள் .

சபரி மிகுந்த மனக்குழப்பத்தில் இருந்தான்.

அங்கு அவனிடம் தோழமையை பேசியது உதய் கிருஷ்ணா மட்டுமே அவனும் இப்பொழுது தாயின் உடல்நிலையை எண்ணி வருத்தத்தில் இருக்கிறான்.ரோஜா அவனுடன் சற்று தோழமையோடு பேசலாம் தான் ஆனால், ஏனோ தெரியவில்லை அவள் எப்போதும் முகத்தில் அறைந்தது போல்

பேசுகிறாள், உதய் கிருஷ்ணாவின் மனைவி நிகிலாவுக்கு, சபரியை பிடிக்கவில்லை போலும்,

இங்கு சபரி எதற்காக வரவழைக்கப்பட்டான்,என்று எண்ணி குழம்பி தவித்துக் கொண்டிருந்தான்.

ஒரு மணிநேர எண்ண சூழலுக்கு பிறகு, பொன்னி( ஜமீனில் எடுபிடி வேலை செய்பவள்)உதய் கிருஷ்ணா அழைப்பதாய் வந்து தெரிவித்தாள் .பொன்னியின் வழிகாட்டுதலின் பெயரில் சபரி மாளிகையின் இரண்டாம் தளத்தை அடைந்தான். சபரி, உதய் கிருஷ்ணாவின் முன்பாகச் சென்று நின்றான்.

அந்த பிரம்மாண்ட மாளிகையின் இரண்டாவது தளத்தில், பால்கனியில் உதய் நின்று இருந்தான். மாளிகைக்கு பின்புறமாய் வைக்கப்பட்டிருந்த தென்னைமரங்கள், காற்றை வாரி வழங்கின.சபரி அரண்மனையின் பிரம்மாண்டத்தை கண்டு பிரமித்த படியே, உதய் கிருஷ்ணாவை நோக்க,

“சபரி .....அம்மாக்கு யாரோ ஸ்லோ பாய்சன் வெச்சுட்டாங்க ”உதய் கண்ணீர் பெருக கூறினான்.சபரி என்ன சொல்வதென்று தெரியாமல் அப்படியே நின்றான்.

“சபரி போலீஸ்ல கம்ப்ளைன்ட் பண்ணில்லானு இருக்க. நீங்க என்ன செல்றிங்க...?”உதய், சபரியிடம் கேட்டான்.

உதய், சபரியிடம் கேட்ட விதம், சபரிக்கு வியப்பை அளித்தது.சபரியின் அமைதி கண்டு

“சபரி சீக்கிரம் சொல்லு ...”உதய் துரிதப்படுத்தினான்.

“ம்ம....என்ன கேட்டா வேண்டாம்னு தான் சொல்லுவ”சபரி யோசனையோடு கூறினான்.

“எதுக்கு வேண்டாம் ....?”உதய் கேட்டான்.

“இல்ல சார் வேண்டாம். கண்டிப்பா வெளியிலிருந்து யாரும் வந்து இத செஞ்சிருக்க முடியாது. இங்க இருக்கறவங்க தான் யாராவது செஞ்சி இருப்பாங்க.”சபரி விளக்கினான்.

“இதுதான் எனக்கும் தோணுச்சு சபரி,ஆனா நா யாரனு சந்தேகப்பட முடியும்,இங்க வேல செய்ற எல்லாருமே பல வருஷமா எங்களுக்கு விசுவாசமா இருக்கிறவங்க ” உதய் கூறினான்.

“சார் நீங்க பர்மிஷன் கொடுத்தா ....என்னோட பிரண்டு ஒருத்தன் சிபிஐயில இருக்கான், அவன்கிட்ட ஏதாவது உதவி செய்ய முடியுமானு.”சபரி தயக்கத்தோடு கூறி நிறுத்தினான்.

“கண்டிப்பா”உதய் அனுமதி அளித்தான்.

உதய்யின் அனுமதிபெற்று சபரி, நண்பனுக்கு போன் செய்தான்.சபரி நண்பனிடம்

*பேசிவிட்டு உதய்யிடம் வந்து ,*

*“சார்...ஏ ஃப்ரெண்ட் கிட்ட சொன்னேன், நேர்ல வந்து பார்க்கிறேன் சொல்லி இருக்கான்.”சபரி நம்பிக்கையான தொணியில் கூறினான்.*

*“ஒகே சபரி”உதய் சொன்னான்*

*“சார் ஒரு சின்ன கண்டிஷன்”சபரி சற்று தயக்கத்தோடு சொன்னான்.*

*“என்ன ..?”என்று உதய் கேட்டான்.*

*“என் ஃப்ரெண்டு சிபிஐங்கரத இங்க யாருக்கும் சொல்ல வேண்டாம், சும்மா எனக்கு ஒரு அசிஸ்டன்ட்னு சொல்லிக்கலாம் .”சபரி கூற*

*உதய் சரி என்று தலையசைத்துவிட்டு,*

*“சபரி உங்கள மாதிரி பஸ்ல வர சொல்லாதீங்க, ஒரு கால் டாக்ஸி புக் பண்ணி வர சொல்லுங்க” சற்று நக்கலாய் கூறிவிட்டு, அவனை கிளம்பச் சொன்னான்.*

*ராணியம்மா உடல்நலக் குறைவினால் மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட விஷயம் வேலனை எட்டியது, வேலனுடைய முதல் குழப்பத்திற்கு விடை கிடைத்த நிம்மதியில்,*

*சாமி கொடுத்த மருந்தை பத்திரப்படுத்திக் கொண்டு மருத்துவமனையை நோக்கி விரைந்தபடி ,அவனை யாரும் மருத்துவமனைக்குள் அனுமதிக்க மாட்டார்கள், பிறகு எப்படி இந்த மருந்தை ராணி அம்மாவிற்கு கொடுப்பது என்று, தீவிர சிந்தனையோடு நடந்து கொண்டிருந்தவனின் மனதில், சாமியின் குரல் ரகசியமாய் ஒலித்தது.*

**தொடரும்...**

## 4. மரகத வளரி (4)

வேலன், ராணியம்மா அனுமதிக்கப்பட்டிருந்த மருத்துவமனைக்கு வெளியே, அமைதியாய் அமர்ந்திருந்தான்.அவன் கையில் கசகசா செடியின் காய்ந்த இலைகளை சேகரித்து வைத்திருந்தான்.

பகல்பொழுது மெல்ல விடைபெற,மையிருட்டு அழகி தடம் பதிக்க தொடங்கியிருந்தாள். வேலன் மருத்துவமனையிலிருந்து வெளியேறுபவர்களை பார்த்துக்கொண்டு அமைதியாக இருந்தான்.அவனுடைய தோற்றம் அவனை பிச்சைக்காரன் என்று யாரையும் கண்டுகொள்ளாமல் கடந்து செல்ல வைத்தது.

அந்த மருத்துவமனை பன்னிரண்டு மணிக்கு மேல்தான் அடங்கியது. வேலன் மெதுவாக,மருத்துவமனையின் நுழைவு பகுதியை அடைந்தான், அந்த பிரமாண்ட கேட், உட்புறம் பூட்டப்பட்டு,அதனருகில் நாற்காலியில் காவலாளி தூங்கிக்கொண்டிருந்தான்.அந்த கேட்டிற்கு வலதுபுறம் சின்னதாக ஒரு கம்பி கேட், தாழ்பாள் மட்டும் போடபட்டு இருந்தது, வேலன் அதை மெல்ல திறந்து கொண்டு, மருத்துவமனையின் வளாகத்தினுள் நுழைந்தான்.

அவனுக்கு யாரும் எந்த சிரமமும் வைக்கவில்லை. அவன் சுதந்திரமாய் முன்னேறி, வரவேற்பு பகுதியை அடைந்தான். அங்கு பணியில் இருந்த இரண்டு பெண்கள் அரை தூக்கத்தில் இருந்தனர். அவர்களைக் கடந்து, மெல்ல அடியெடுத்து வைத்தான்.

ராணியம்மா நிச்சயம், முதல் வகுப்பில் தான் அனுமதிக்கப்பட்டு இருப்பார், என்பதை தீர்மானித்துக் கொண்டு ,கண்களால் மெல்ல முதல் வகுப்பை தேடினான்.தரை தளம், முதல் தளம் இரண்டிலும் தேடியபடியே கடந்து இரண்டாம் தளத்தை அடைந்தான்.

இரண்டாம் தளத்தில் வலது பக்கம், நான்காவது அறையில் ராணியம்மா படுத்திருந்தார். அருகில் நர்ஸ் ஒருத்தி தூக்கத்தில் இருந்தாள். இதுவரை எந்தப் பிரச்சினையும் இன்றி முன்னேறிய வேலன், டூட்டி டாக்டரிடம் சிக்கினான்.

"யார் நீ எப்படி உள்ள வந்த...?டூட்டி டாக்டர்"கோபத்தோடு கேட்டார்.

வேலன் பதிலேதும் சொல்லாமல் தன் கையில் சேகரித்து வைத்திருந்த கசகசா இலைகளை, அவர் நாசிக்கு நேராக நீட்ட, டூட்டி டாக்டர் பிரம்மை பிடித்தவர், போல் விலகி வேலனுக்கு வழிவிட்டார்.

வேலன், ராணி அம்மாவின் அறையை அடைந்ததும் ராணியம்மா, கண் விழித்தாள்.

வேலன், ராணி அம்மாவின் அருகில் சென்று,

“பயப்படாதீங்க எல்லாம் சரியா போயிடும்.” என்று கூறியபடியே அவன் பத்திரப்படுத்தி எடுத்துச்சென்ற மருந்தை, ராணி அம்மாவின் வாயில் ஊற்றினான். ராணி அம்மாவும் எந்த மறுப்பும் இன்றி அதை குடித்தாள்.

மருந்தை கொடுத்துவிட்டு வேலன், இரண்டு அடி விலகி நின்று கண்களை மூடி, கரம் குவித்து சாமியை பிரார்த்தித்தான் .பிறகு அந்த அறையிலிருந்து வெளியேறி மெல்ல நடந்தான். டாக்டர் இப்பொழுது லேசாய் சுய நினைவு பெற்றவராய் அவனை முறைத்துப் பார்த்தார். ஆனால் அவனை எதுவும் கேட்கவில்லை. அவன் வந்த சுவடே தெரியாமல் மருத்துவமனையிலிருந்து மறைந்தான்.

அதிகாலை சபரி அலைபேசியின் அலறலில் கண்விழித்தான். மணி ஐந்தை காட்டியது,

“யார்ரா இந்த நேரத்துல….?” சலிப்போடு தொலைபேசியை எடுக்க, சபரியின் நன்பன் சூரி பாபு தான் திரையில் தெரிந்தான்.

“சொல்லுடா சூரி …?”தூக்கக் கலக்கத்தோடு சபரி கேட்டான்.

“அடேய் சபரி சீக்கிரம் வாடா…. நாய் துரத்திட்டு இருக்கு ”சூரி பாபு பயத்துடன் கூறினான்

“எங்கடா இருக்க அதை சொல்லு முதல்ல ..?”சபரி தூக்கம் கலைந்த எரிச்சலோடு கேட்டான் .

“இந்த ஜமீன் கேட்டூக்கு வெளில தான் டா இருக்கேன் சீக்கிரம் வாடா ”சூரி பாபு பதட்டத்தோடு கூறினான்.

சபரியும் அடித்து பிடித்து எழுந்து வெளியே ஓடிவந்தான்.

சூரி பாபு பூட்டியிருந்த ஜமீனின் பிரம்மாண்ட கேட்டில், பல்லி போல் ஒட்டி கொண்டிருந்தான்.

“டேய் மச்சான் என்னடா இப்படி அசிங்க படுத்துற ……?”சபரி எரிச்சலோடு கேட்டபடியே அருகில் சென்றான்.

“நா என்ன பண்ணட்டும் இந்த அறிவு கெட்ட நாய் துரத்திட்டு வந்தது .”சூரி பாபு கூறினான். சூரி பாபுக்கு அருகில்

பெரிய சைஸ் நாய் ஒன்று தன்னுடைய கொடூரமான கோர பற்களை காட்டியபடி, இருவரையும் பார்த்து குலைத்தது.

“டேய் உன்ன பெரிய சிபிஐ ஆபீசர், ரொம்ப புத்திசாலினு எல்லாம் சொல்லி வச்சிருக்கேன் நீ

ஏண்டா இப்படி மானத்த வாங்குற ....!”சபரி கோபத்தோடு கத்தினான்.

“இடியட், நா சிபிஐ ஆபீசர், புத்திசாலிங்கது உனக்கு தெரியும் நாய்க்கு தெரியுமா ....!”சூரி பாபுவும் பதிலுக்கு கத்தினான். நாய் பாவம் என்ன நினைத்ததோ என்னவோ ...?குறைப்பதை நிறுத்தி மெல்ல வாலை ஆட்டியபடி எதிர்திசையில் நடந்து போய்விட்டது.

“பிளடி இடியட்.... இது பஸ்டே பண்ணி இருந்தா என் மானம் மரியாதை தப்புச் இருக்குமா ....?”சூரி பாபு கூறியபடியே கேட்டிலிருந்து இறங்கினான்.

“டேய் உன்ன கால் டாக்ஸி தானே புக் பண்ணிட்டு வர சொன்னேன் ....?”சபரி கேட்டான்.

“கால் டாக்ஸிய ஊருக்கு வெளியிலேயே கட் பண்ணி அனுப்பிச்சிட்டேன், கேள்வி கேட்டது போதும் கதவைத்திற”சூரி பாபு கூறினான்.

சபரி பரபரப்போடு போய், எடுபிடி வேலை செய்யும் பொன்னியை எழுப்பி கேட்டை திறக்க வைத்தான். சபரியின் அறையில் நண்பர்கள் இருவரும் சற்று ஓய்வெடுக்க, யாரோ கதவு தட்டப்படும் ஓசை கேட்டு சபரி கதவைத்திறந்தான்.புதிதாய் பூத்த மலர் போல,

ரோஜா நின்றிருந்தாள்,

“சொல்லுங்க மேடம்”சூரி பாபு அவசரமாய் தலையை நீட்டினான்.சபரி வெளியேவர,

“யார் இது .....?”ரோஜா அதிகாரத் தோரணையோடு கேட்டாள்.

“என்னுடைய பிரண்ட், மியூசியத்த பார்த்துக்க ஹெல்ப் பண்ண வந்திருக்காரு”சபரி அவசரமாய் கூறினான்.

“ம்ம....ஜமீன் உங்களை வரச் சொன்னாரு”ரோஜா கூறி விட்டு வெளியேறினாள்.

“டேய் யாருடா இவ ரோஜாப்பூ மாதிரி சூப்பரா இருக்கா .....?”சூரி பாபு, லிட்டர் கணக்கில் வழிந்தபடி கேட்டான்.

“அவளும் நம்மள மாதிரி இங்கே வேலை செய்றவ தான், ஊ...வாய்க்கொழுப்பு எல்லாம் அவகிட்ட காமிக்காத ...?”சபரி,சூரியை எச்சரித்தான்.

“உன்ன மாதிரி, வேல செய்றவனு சொல்லு .” சூரி கூற சபரி முறைத்தான்.

“ஓகே கூல் கூல், சரி அந்த பொண்ணு எப்படி .....?”சூரி கேட்டான்.

“ஒழுங்கா வந்த வேலைய மட்டும் பாரு அந்த பொண்ணு ஒரு மாதிரி.”சபரி மீண்டும் சூரியை எச்சரித்தான்.

” ஓய் டா மச்சான் ..?”சூரி ஆர்வத்தோடு கேட்டான்.

“இல்லடா ஒரு மாதிரி மூஞ்சில அடிச்ச மாதிரி பேசுற, நடந்துக்கிற எதுக்கு….?”சபரி சற்று சலிப்போடு சொன்னான்.

“செமயா… இருக்கா இல்ல அவ பேர் என்ன …?”சூரி பாபு ஜொள்ளு விட்டபடியே கேட்டான்.

“நீதான் சொன்னியே ….”சபரி கூறினான்.

“நான் சொன்னேனா ….?”சூரி உதட்டில் வலது கை விரலை வைத்தபடியே யோசித்தான்.

“சரி ஜமீன்னு சொன்னாலே அது யாரு ….?”சூரி, சபரி இடம் கேட்டான்

“நா சொன்னல்ல உதய் கிருஷ்ணா ….?”சபரி பதிலளித்தான்.

“ஓகே சீக்கிரம் வா நம்ம போய் உதய் பாத்துட்டு வந்துருவோம்.”சூரி, சபரியிடம் கூறினான். சபரி முன்னே நடக்க , சூரி பின் தொடர்ந்தான்.

உதய் கிருஷ்ணா மலர்ந்த முகத்துடன் சபரியை வரவேற்றான்.

“சபரி இவர் யாரு …?”உதய், சூரியை பார்த்தபடி கேட்டான் .

“நா சொன்ன இல்ல என்னோட ஃப்ரெண்ட் ….ன்னு”யாரே நிற்பது போன்ற உள்ளுணர்வில் சபரி, முற்றத்தை பார்த்தபடியே இழுத்தான்.

“குட் மார்னிங் சார்.”சூரி

முற்றத்தில் யாரே நிற்கும் நிழல் தெரிய , சூரி உதட்டில் கை வைத்து இருவரையும் பேச வேண்டாம் என்று சொல்லிவிட்டு பூனைபோல் பதுங்கி பதுங்கி அறையின் மூலையில் முற்றத்தை பார்த்தபடி நின்றான். அங்கிருந்து சபரியை பார்த்து பேசும்படி ஜாடை செய்தான்.

“சார்….மியூசியத்த பார்த்துக்க ஹெல்ப்புக்கு ஆள் வேணும்னு சொல்லி இருந்தால்ல…”என்று சபரி, சூரியை பார்த்தபடியே நிறுத்தினான்.

“ஓகே உங்க பிரண்டு என்ன படிச்சு இருக்காரு”உதய்யும் சூரியை பார்த்தபடியே பேசினான். சூரி மெல்ல முன்னேறி, முற்றத்தை அடைய அங்கு யாரோ வெளியேறும் அவசரத்தில் எதன் மீதோ மோதி,

பூஜாடி போன்று ஏதோ உருண்டு விழும் ஓசை மூவருக்கும் தெளிவாய் கேட்டது. சூரி பாபு உதய் கிருஷ்ணாவின் அருகில் வந்து,

“பாத்தீங்க இல்ல,கேர்ஃபுல்”என்று எச்சரித்தான்.

“அம்மாவோட ஹெல்த், இம்ப்ரூவகி இருக்கு”உதய் ரகசியமாய் சொன்னான்.

“ஓகே சார் இந்த விஷயத்த உங்களோடு வச்சுக்கோங்க, யாருகிட்டயும் சொல்லாதீங்க ..”சூரி, உதய்யிடம் கூறினான்.

“ரொம்ப சந்தோஷம் சார்”சபரி.

“நீங்க ரெண்டு பேரும் இப்போ போங்க பத்தரை மணிக்கு மேல மியூசியத்தில மீட் பண்ணலாம் .நா போய் அம்மாவ பாத்துட்டு வந்துடறேன்”உதய் விடைபெற்றுக் கொண்டான்.

அவர்கள் மூவரும் அங்கிருந்து கலைந்து அவர் அவர்கள் பணியை பார்க்க சென்றனர்.

“டேய் சூரி ஒளிஞ்சிருந்து கேட்டது யாராயிருக்கும் ....?”சபரி சற்று கவலையோடு சூரியிடம் கேட்டான்.

“அந்தப் பொண்ணு பேரு ரோஜா தானே ...?”சூரி பாபு கேட்டான்.

“என்னடா நான் ஒன்னு கேட்டா சம்பந்தமே இல்லாம நீ ஒன்னு சொல்லுற ...?”சபரி, எரிச்சலை அடக்கியபடி கேட்டான்.

“சரி நான் கொஞ்ச நேரம் தூங்குறேன், நீ போய் உன் வேலைய பாரு ஷார்ப்பா ஒன்பது மணிக்கு எழுப்பி விடு”சூரி பாபு, சபரிக்கு உத்தரவிட்டடு,படுக்கையில் சரிந்தான்.

” இவன் ஒரு பைத்தியக்கார ஆச்சே.....,சக்தி வருவான்னு பார்த்தா இவனை அனுப்பி வச்சி,ராமா.... இனி என்ன எல்லாம் கூத்தடிக்க போறான்னோ.....?, வாய்க்கொழுப்ப பேசி என்ன வம்பிழுக்க போறானோ தெரியல.....? ”சபரி வாய்விட்டு புலம்பியபடியே,குளித்து தயாரானான்.

” சூரி எந்திரிடா மணி ஆச்சு ....”சபரி, சூரி பாபு எழுப்பி விட்டான்.சூரிய பாபு குளிக்கப் போக,

ரோஜா காலை சிற்றுண்டியை எடுத்து வந்தாள்.சபரி, ரோஜாவிடம் எதுவும் பேசவில்லை. ரோஜா வெளியேறிய அடுத்த வினாடி சூரி, அவசரமாய் குளித்துவிட்டு உடை மாற்றியும் மாற்றாமலும் வெளியே ஓடிவந்து,

“இப்ப வந்தது யாரு அந்த பொண்ணா ......?”சபரிடம் கேட்ட படியே, அவனை கடந்து வாயிலை

நோக்கி ஓடினான்.

“என்ன டிபன் குடுத்துட்டு போனாளா....?”சூரி மீண்டும் ஓடிவந்து சபரியிடம் கேட்டான் .

“ஆமா ......அது சரி உனக்கு என்ன இந்த பொண்ணு மேல இவ்வளவு இன்டர்ஸ்ட் ....?”சபரி வியப்போடு கேட்டான்.

“உன்கிட்ட ஒரு கேள்வி .....?”சூரி ,சபரியை நெருங்கி கேட்டான்.

“கேட்டு தொல”சபரி எரிச்சலோடு சொன்னான்.

“என் பர்சனாலிட்டி எப்படி .....?” சூரி கேட்டான் .

“ம்ம......எப்படின்னா நா என்ன பதில் சொல்றது”.சபரி சூரியை திருப்பிக் கேட்டான்.

“டேய் நா அழகா இருக்கேனானு கேட்டேன் டா ....?”சூரி கூறினான்.

“சொன்னா வருத்தப்பட மாட்டியே ......?”சபரி சற்று கிண்டலாய் கேட்டான்.இல்லை என்பது போல் சூரி தலையசைக்க ,

“கருணாஸ் கலர், கருணாகரன் கண்ணு, யோகி பாபுவோட வயிறு, சூரியோட அறிவு .....மச்சான் நீ வேற லெவல் டா”சபரி சிரித்தபடியே கூறினான்.

“தேங்க்யூ தேங்க்யூ .....அந்த பொண்ணு எனக்கு தான்.”சூரி புன்முறுவல் பூத்த படியே கூறினான் .

“ஏன்டா உனக்கு கோபமே வரலையா .....?”சபரி கேட்டான்

“எதுக்குடா கோபிச்சுக்கணம்....?,நீ சொன்ன அத்தனை பேருமே பெஸ்ட் காமெடியன்ஸ்,உலகத்தில ஒருத்தர சிரிக்க வைக்கிறது ரொம்ப கஷ்டமான வேல, அதையே இவங்கல்லாம் ஈசியா செய்யறாங்க, நா அவங்கள மாதிரி இருக்கேன்னு சொல்ற .....சோ சந்தோஷம் தானே படணும்”சூரி தன்னம்பிக்கையோடு பதில் கூற,

“சாரிடா மச்சான் சும்மா விளையாட்டுக்கு தான் சொன்னேன், நீ நல்லா அழகாதான் இருக்க”.சபரி வருத்தப்பட்ட படியே அவனிடம் மன்னிப்பு கேட்டான்.

இருவரும் பேசியபடியே காலை சிற்றுண்டியை முடித்துக் கொண்டு மியூசியத்துக்கு கிளம்பினர்.

சபரி மியூசியத்தின் சாவியை பூட்டில் பொருத்தி, திறக்க போகிற நிமிடத்தில் பொன்னி கிழவி ஓடிவந்து,

“தம்பி ஜமீன் ஐயாவுக்கு உடம்பு சரியில்லையாம், உங்க ரெண்டு பேரையும் வர சொன்னாரு”என்று மூச்சு வாங்கியபடி கூறினாள்.

என்னவாக இருக்கும் என்று இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ள, கிழவி வரும்படி சைகை செய்துவிட்டு முன்னால் ஓடினாள்.

வேலன், ராணி அம்மாவுக்கு மருந்து கொடுத்த விஷயத்தை, சாமியிடம் கூறிவிட்டு கைகூப்பி வணங்கியபடி பயபக்தியுடன் நின்றிருந்தான்.

“வேலா உனக்கு **க்ருமீ மஸ்தகி** சூரணம் பண்ண தெரியுமில்ல ....?”சாமி கேட்டார்.

“தெரியும் சாமி”வேலன் கூப்பிய கரத்துடன் பதில் சொன்னான்.

“அப்போ உடனே பண்ணி சூரணத்தை எடுத்துட்டு போய்,சூரி கிட்ட குடுத்து ஜமீனுக்கு குடுக்க சொல்லு ”சாமி, வேலனுக்கு உத்தரவிட்டார்.

“சூரி யாரு சாமி .....,அவன நா எப்படி அடையாளம் தெரிஞ்சுகிறது .....?”வேலன் பணிவோடு கேட்டான்.

“கவலைப்படாத அவனே உன்ன தேடி வருவான்.”சாமி நம்பிக்கையோடு கூறினார்.வேலன்

சாமியிடம் அதன்பிறகு எந்த கேள்வியும் கேட்காமல் வெளியேறி, க்ருமீ மஸ்தகி

சூரணம் தயாரிக்கும் பணியில் இறங்கினான்.

உதய் கிருஷ்ணாவின் அறைக்கு ஓடிய சபரியும் சூரியும்,அறையில் உதய் கிருஷ்ணா கிடந்த கோலத்தை கண்டு உறைந்து போய் நின்றனர்.

**தொடரும்.......**

## 5. மரகத வளரி (5)

*கீழ்வரிசை பற்கள் மேல் உதட்டை கடித்தப்படி,*

*வலது நாசியில் ரத்த கீற்று,வலது கையும் இடது காலும் முறுக்கிக்கொண்டு கண்கள் மேலே நிலைகுத்தி உதய் கிருஷ்ணா தரையில் கிடந்தான். அவனுடைய நிலையை கண்ட சூரியும் சபரியும் அப்படியே உறைந்து போய் நின்றனர். ஒருவேளை இறந்து போய் விட்டானோ...? என்று சபரிக்கு தோன்றியது.*

*"சபரி உடனே போலீசுக்கு போன் பண்ணு" சூரி, சபரிக்கு உத்தரவிட்டான்.*

*"இல்லடா இல்ல, கண்டிப்பா போலீஸ்க்கு சொல்ல வேண்டாம்னு... உதய் கிருஷ்ணா பஸ்டே சொல்லியிருக்காரு."சபரி பதட்டத்துடன் கூறினான்.*

*" உயிருக்கு ஆபத்தான நிலமைல கிடப்ப போலீசுக்கு போன் பண்ணாதனு சொன்னாரா.....?, ஓகே ஆம்புலன்ஸ்க்கு போன் பண்ணு. "சூரி கத்தினான்.*

*ஆம்புலன்ஸ் வரவழைக்கப்பட்டு ராணியம்மா இருக்கும் அதே மருத்துவமனையில் உதய் கிருஷ்ணாவும் அனுமதிக்கப்பட்டான்.மருத்துவர்கள் சிகிச்சை ஆரம்பிக்க, சூரி, சபரியை அழைத்துக்கொண்டு ,மருத்துவமனையை விட்டு வெளியே வந்தான். அந்த மருத்துவமனையின் பிரம்மாண்ட கேட்டிற்கு சற்று அருகே நின்றுகொண்டு,*

*"ஏன்டா போலீஸ்க்கு சொல்ல வேண்டாம்னு சொன்ன...?"சூரி, சபரியிடம் கோபத்தோடு கேட்டான்.*

*"இல்லடா நெத்திக்கே அவர் எதோ டிஸ்கஸ் பண்ணனும் சொல்லி இருந்தாரு, அவங்க குடும்பத்துல நிறைய குழப்பங்கள் இருக்கும்னு தோணுது, அதனால்தான், அவங்க குடும்ப உறுப்பினர்கள், நண்பர்கள், தெரிஞ்சவங்கனு யாருகிட்டையும் எந்த உதவியும் கேட்காமல், புதுசா வந்த என் கிட்ட ஏதோ டிஸ்கஸ் பண்ண நினைச்சு இருக்காரு,அது மட்டும் இல்ல அவங்க அம்மாவுக்கு ஸ்லோ பாய்சன்வச்சுட்டாங்க ன்னு சொன்னாரு, நா உன்னோட உதவி தேவைனு உன்ன வரவச்ச "சபரி தன்னிலை விளக்கம் அளித்தான்.*

*"ம்...ம்ம ஆமா உதய் கிருஷ்ணா, வைஃப் நிகிலா எங்க ....?சூரி சந்தேகத்தோடு கேட்டான்.*

*சபரி தெரியவில்லை என்று உதட்டை பிதுக்கினான்.*

“ஓகே அவங்க அம்மாக்கு ஸ்லோ பாய்சன் வச்சது யாரு என்னனு ஏதாவது…? இல்ல யார் மேலேயாவது சந்தேகம்னு…உதய் சொன்னாரா? ”சூரி சிந்தனையும் சந்தேகமும் கலந்த குரலில் கேட்டான்.

“இல்லடா எல்லாருமே ரொம்ப விசுவாசமா இருக்கிறவங்க, யார் மேலேயும் சந்தேகப்பட முடியாதுனு சொன்னாரு”சபரி கூறினான்.

“இங்க சபரி யாரு …..?”கேட்டபடி வெண்ணிற உடையில் நர்ஸ் நின்றிருந்தாள்.

“நா தான் மேடம்”சபரி முன் வந்தான்

“உதய் கிருஷ்ணாக்கு கான்சியஸ் வந்துடுச்சு உங்கள வர சொன்னாரு”நரஸ்,கூற சபரி அவளுடன் நடந்தான் .

எங்கேயோ தூரத்தில் நின்றிருந்த நாய் ஒன்று, சூரியை கண்டதும் அவன் மேல் பாய்வது போல் ஓடி வந்தது,

“பிளடி டாக் மறுபடியும் வந்துருச்சு”சூரி வாய்விட்டு கூறியபடியே ஓடத் தொடங்கினான். பதினைந்து நிமிட ஓட்டத்திற்கு பிறகு, கல் தடுக்கி வேலன் மீது விழுந்தான்.எழுந்து சுதாரித்து நின்று சுற்றுமுற்றும் நாயை தேடினான்.

“ஏய் பார்த்து வர மாட்ட ….?”வேலன், சூரி பாபுவை கேட்டான்.சரியாக சொல்லி வைத்தது போல், சூரியின் அலைபேசி அடித்தது, திரையில் சபரியின் எண்கள்,

“ஹலோ சூரி இயர்”என்றான்.

“இங்கிலீஷ்க்கு ஒன்னும் குறைச்சல் இல்ல எங்கடா போய் தொலைஞ்ச …?”சபரி எக்கச்சக்க கோபத்தில் கேட்டான்.

” மச்சான் வரேன் டா ”கூறியபடியே சூரி அலைபேசியை துண்டித்து விட்டு வேலனிடம் மன்னிப்பு கேட்டான்.

“உங்க பேர் என்ன சொன்னீங்க …..?”வேலன் இன்ப அதிர்ச்சியோடு கேட்டான்.

“சூரி பாபு”சூரி கூறினான்

“ஒரு நிமிஷம் இருங்க”வேலன் கூறிவிட்டு, தன் இடையில் வாழை இலையில் சுருட்டி வைத்திருந்த சூரணத்தை எடுத்து,

“இந்த சூரணத்தை ஜமீனுக்கு சாப்பிட்டதுக்கு அப்புறம் மூனு வேளை கொடுங்க”என்று கூறியபடியே சூரியிடம் நீட்டினான்.

”ஜமீன்னா.. யாரு உதயகிருஷ்ணா வா ....?சூரி தயக்கத்தோடு கேட்டான். வேலன் புன்னகைத்தபடியே ஆம் என்று தலையசைத்தான்.

“ஜமீனுக்கு உடம்பு சரியில்லாமல் போனது உங்களுக்கு எப்படி தெரியும் ....?”சூரி பலத்த அதிர்ச்சியோடு கேட்டான்.

“தெரியும் ஜமீனுக்கு உடம்பு சரி இல்லாம போனது எனக்கு தெரியும், ராணி அம்மா உடம்புக்கு முடியாம போய் திரும்பி குணமானது எனக்கு தெரியும், நீ யாருன்னும் எனக்கு தெரியும், சபரி யாருன்னும் எனக்கு தெரியும்”வேலன் கூறியபடியே புன்னகைத்தான்.

“இது என்ன மருந்து நா எப்படி உங்களை நம்புறது?”சூரி பயம் கலந்த தயக்கத்தோடு கேட்டான். வேலன் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, சூரி அருகில் மிக நெருக்கமாய் வந்து, கண்மூடி சாமியை பிரார்த்தித்துக் கொண்டான். அவன் மனதிற்குள் சாமியை பற்றியும் ராணி அம்மாவிற்கு மருந்து கொடுத்தது பற்றியும் சொல் என்று உத்தரவு வந்தது,வேலனும் அதை சூரியிடம் ரகசியமாய் பகிர்ந்துகொண்டான்.சூரிக்குள் ஏதோ ஒரு உந்துதல் எந்த கேள்வியும் கேட்காமல் வேலன் கொடுத்த சூரணத்தை பெற்றுக்கொண்டு மருத்துவமனை நோக்கி நடக்க தொடங்கினான்.

“எருமை எங்கடா போய் தொலைஞ்ச .....?”சூரியை சபரி, உதய் கிருஷ்ணா அனுமதிக்கப்பட்ட அறைக்கு வெளியே நின்று கோபத்தோடு வரவேற்றான்.

“பக்கத்துலதான்”சூரி சாதாரணமாக பதில் சொன்னான் .

“சார் ....சூரி வந்துட்டான்”அறையில் நுழைந்தபடியே சபரி,உதய்யிடம் சொன்னான்.உதய் சிரமபட்டு கண்களைத் திறந்து இருவரையும் பார்த்தான் .

“சார் எனக்கு தெரிஞ்ச ஒரு நாட்டு மருத்துவர் இத குடுத்தாரு ” சூரி அத்தையிடம் கூறினான்.

ஏதோ கூற வாய் எடுத்த உதய் கிருஷ்ணாவை கையமர்த்தி, சூரி சூரணத்தைப் கையிலெடுத்து

“சாப்பாடு ஏதாவது சாப்பிட்டீங்களா ....?”என்று உதய்யிடம் கேட்டான்.

உதய் ஆம் என்று தலை அசைத்தான்.சூரி, உதய் தலையசைப்பதை கண்டதும் சூரணத்தை வாயில் போட்டு தண்ணீர் குடிப்பாட்டினான்.

“நீங்க நல்லா ரெஸ்ட் எடுங்க நாங்க வெளியில இருக்கோம்.”கூறிவிட்டு சபரியை வெளியே வா

என்று கண்களால் ஜாடை செய்தபடியே நடந்தான்.

“என்ன கருமம்டா இது....?,நீ பாட்டுக்கு என்னமோ சொல்லிட்டு இருக்க, இந்த ஊர்ல உனக்கு, எந்த நாட்டு வைத்தியர தெரியும்.”சபரி மருத்துவமனை என்றும் பாராமல் பெரிதாய் குரலெடுத்து கூச்சலிட்டான் .

நர்ஸ் ஒருத்தி ஓடிவந்து,

“சார் எத இருந்தாலும் வெளியில போய் பேசுங்க, பேஷன் டிஸ்டர்ப் ஆவாங்க.” என்றாள்.

“சாரி மேடம் சாரி”என்று கூறியபடியே சூரி, சபரின் கைகளை பிடித்து இழுத்துக் கொண்டு வெளியே நடந்தான்.

வெளியே வந்து சூரி, சபரியயிடம் நடந்தவற்றைக் கூறினான்.சபரிக்கு என்ன சொல்வது என்று விளங்கவில்லை.

“டேய் சபரி இன்னொரு முக்கியமான விஷயம்”சூரி சுற்றுமுற்றும் பார்த்தபடி குரலைத் தழைத்துச் சபரிடம் சொன்னான் .

“என்ன ...?”சபரி சற்று கலக்கத்தோடு கேட்டான்.

“இந்த சூரணத்தை வாங்கிட்டு வர வழியில, அந்த பொண்ணு ரோஜாவைப் பார்த்தேன்.”சூரி கூறினான்.

“உனக்கு வேற வேலை இல்ல,நேரம் காலம் தெரியாம”என்று சபரி முடிப்பதற்குள்,

“இடியட் ஃபுல்லா கேளுடா ...,கூடவே உதயகிருஷ்ணாவோட வைஃப் நிகிலா வையும் பார்த்தேன் .”சூரி

“டேய் நீ தான் உதயகிருஷ்ணா வைஃப் மீட் பண்ணவே இல்லையே உனக்கு எப்படி அவங்கதான்னு தெரியும்.”சபரி சந்தேகத்தோடு கேட்டான்.

”டேய் அரைக் கிறுக்கு,நான் போலீஸ்காரன் டா,

ஒரு காரியத்தில் இறங்கரத்துக்கு முன்னாடி யாரு, என்ன, எப்படி, பேக்ரவுண்ட் என்னன்னு தெரியாம கால் வைக்க மாட்டோம்.உதயகிருஷ்ணாவோட ஃபுல் ஹிஸ்டரியை நா தோண்டி பார்த்துட்டு தான் கிளம்பி வந்தேன் .”சூரி கூற சபரி சற்று அதிர்ந்தான் .

“ஆமாண்டா ......உதய் குடும்பத்துல ஏகப்பட்ட பிரச்சனைகள் இருக்கு, அவன் லவ் மேரேஜ்

பண்ணி இருக்கான். உதய்யோட அம்மா இந்த கல்யாணத்தை ஏத்துக்கல,உதய் எம்சிஏ கோல்ட் மேடலிஸ்ட், பெங்களூர்ல பெரிய ஐடி கம்பெனில வேலை பார்த்துட்டு இருந்தா, அங்க அவன் கூட வேலை பார்த்த பொண்ணுதான் நிகிலா, அந்த பொண்ணு தான் ப்ரொபோஸ் பண்ணி இருக்க,ஆறு மாசந்தான் லவ் பண்ணி இருக்காங்க,போன மாசம் திடுதிப்புன்னு கல்யாணம் பண்ணி கூட்டிட்டு வந்துருக்கான்.''சூரி நீளமாய் பேசி நிறுத்தினான்.

''அப்போ நிகிலா பத்தி உனக்கு ஃபுல் டீடைல்ஸ் தெரியுமா...?, ரோஜாவை பத்தியும் தெரியுமா .....?''சபரி பரபரப்போடு கேட்டான்.

''அந்த பொண்ணு பேரு ரோஜா கிடையாது, பூங்குழலி தேவி,அவ யாருன்னு தெரிஞ்சா ரொம்ப ஷாக்காயிடுவ.....''சூரி கொக்கி போட்டு நிறுத்தினான்.

''யாருடா ...?''சபரி படபடத்தான்.

''பூங்குழலி தேவி, ஜமீனோட இளையராணி.''சூரி ,சபரிக்கு அதிர்ச்சி கொடுத்து நிறுத்தினான்

''இளைய ராணினா உதயகிருஷ்ணாக்கு முறைப்பொண்ணு ....?''சபரி கேட்டான்

''போடா....தங்கச்சி.''சூரி கூற சபரிக்கு லேசாய் தலை சுற்றியது.

''காலையில உதய் ரூம்ல ஒட்டுக் கேட்டது யருனு தெரியுமா ....?''சூரியே தொடர்ந்தான்.

''யாருடா ரோஜாவா..., சாரி பூங்குழலி தேவியா.....?''சபரி கேட்டான்.

''இல்ல....,நிகிலா''சூரி பதிலளித்தான்.

''நிகிலா தானு உனக்கு எப்படி தெரியும் .''சபரி கேட்டான்.

''குட் கொஸ்டின், அவ விழுந்தடிச்சீ ஓடுனத நானே பார்த்தேன்.''சூரி கூறினான்.

''ஏ.... இத காலையில உதய் கிட்ட சொல்லல''சபரி சற்று கோபத்தோடு கேட்டான்.

''மொதமொதல்ல சந்திக்கும்போது அவரோட மனைவி பத்தி குறை சொன்னா நல்லா இருக்காது, அதுவுல்லாம என்ன உதய் நம்பனம்மில்ல''சூரி விலக்கினான் .

சூரி சொல்வது சரி என்று சபரிக்கு பட்டது அதனால் சற்று நேரம் அமைதியாக யோசிக்க

அவன் யோசித்துக் கொண்டிருக்கையிலேயே

யாரோ முகமூடி அணிந்த நபர் ஒருவன் சூரியை பின்னிருந்து தாக்க வந்தான். துரிதமாய் செயல்பட்டு சபரி அவனைத் தடுக்க சபரியும் சூரியும் சேர்ந்து அவனை அடித்து உதைத்தனர் .

*“ஒழுங்கா சொல்லு யாரு உன்ன அனுப்புனது ....?”சபரி,அடிக்க வந்தவன் மேலே அமர்ந்து கொண்டு விலாவில் குத்து விட்டபடியே கேட்டான்.*

*“நிகிலா மேடம் ” அவன் கூற சபரி சற்று திகில் அடைந்தான்,*

*“நான் நினைச்சேன்”எபரியிடம் சொல்ல ,*

*இது தான் தக்க சமயம் என்று அடிக்க வந்தவன் தப்பி ஓடினான் .*

*“நிகிலா எதுக்கு ஒன்ன அடிக்கணம் ....?”சபரி உச்சகட்ட குழப்பத்துடன் கேட்டான். ஆனால்,*

*சூரி மனதிற்குள் வேலன் கூறிய,*

*“**நீ யாருன்னு எனக்கு தெரியும், சபரி யாருன்னு எனக்கு தெரியும்**.” என்ற வார்த்தைகள் ரீங்காரமிட்டன.*

**தொடரும்** ....

## 6. மரகத வளரி (6)

“சபரி .....நீ உதய பாத்துக்கோ, அந்த சூரணத்தை சப்டத்துக்கு அப்பறம் உதய்க்கு இன்னும் இரண்டு வேளை கொடுக்கனம் ,பக்கத்திலேயே, இரு யாரையும் நம்பாத யாரேடையும் எதுவும் பேசாத ,நா பக்கத்துல கொஞ்சம் போய்ட்டு வரேன் வரத்துக்கு லேட்டாகும், போன் பண்ணாத”சூரி, சபரிக்கு சில அறிவுரைகளையும் எச்சரிக்கைகளையும் கூறிவிட்டு சபரியின் பதிலை எதிர்பாராமல் கிளம்பிவிட்டான்.

சபரி முகத்தில் எக்கச்சக்க குழப்ப ரேகைகள் கூடவே கவலை ரேகைகளும் இணைந்துகொண்டன.சூரியின் அறிவுரையும் எச்சரிக்கையும் சரி என்றே சபரிக்கு தோன்றியது .உதய் மற்றும் அவனுடைய தாய் இருவருக்குமே உயிருக்கு ஆபத்து காத்திருக்கிறது போலும், சபரியின் எண்ணங்கள் அவனை நான்கு புறங்களிலும் சிதறடிக்க,உதய் அருகில் அமர்ந்திருந்தான்.

மருத்துவமனையில் இருந்து கிளம்பிய சூரி, ஊர் முழுக்க வேலனை தேடி அலைய, சூரி தேடிக்கொண்டிருந்த அதே நேரம் வேலன், சாமியின் அருகில் கைகூப்பி வணங்கியபடி நின்றிருந்தான்.

” என்ன வேல .....கொடுத்த வேலைய கச்சிதமாக முடிச்சுட்ட போல இருக்கு. ”சாமி கண்களை திறவாமலேயே சன்னமான குரலில் கேட்டார்.

“ஆம்மா....சாமி முடிச்சிட்ட இன்னும் நா என்ன கடமையை நிறைவேற்ற பாக்கியிருக்கு.”வேலன் வணங்கியபடி பணிவாக கேட்டான்.

“நிறைய இருக்குடா, அந்த போலீஸ்காரன் உன்னத் தேடிட்டு இருக்கான்.”சாமி மெல்ல கண்களைத் திறந்து புன்னகைத்தபடி கூறினார்.

“நா இப்ப என்ன செய்யணும் சாமி”வேலன் மெதுவாய் கேட்டான்.

” நீ..... நாளைக்கு காலையில சபரிய கூட்டிட்டு வந்து என்ன பாரு .”சாமி கூறினார்.

“சரி சாமி”வேலன் பக்தியோடு கூறிவிட்டு வெளியேறினான்.

மாலை ஐந்து மணிவரை வேலனை தேடி சூரி ஊர் முழுக்க அலைந்து திரிந்தான் .கால் வலியும் தலைவலியும் மட்டுமே அவனுக்கு மிச்சம்.வேலனை காணவில்லை என்ற சலிப்போடு

பரந்து அகண்ட, அந்த அரச மரத்தின் கீழ் வந்து அமர்ந்தான்.

“நீ எதுக்குடா மெனக்கெட்டு வேலன தேடிக்கிட்டு இருக்க,நீ வந்த வேலைய பாரு”சூரிக்கு அந்தக் குரல் மிக தெளிவாக கேட்டது.

சூரி எந்தவித பயமும் பதற்றமுமின்றி சுற்றுமுற்றும் பார்த்தான்.இதற்கு முன்னால் இது போன்று அவனுக்கு நிகழ்ந்தது கிடையாது. அந்தக் குரல் அவனுக்கு அமானுஷ்யமாகவோ, திகிலாகவோ தோன்றவில்லை, மாறாக தான் செய்து கொண்டிருப்பது வீண் வேலை என்று பட்டது.

சரி மருத்துவமனைக்கு போய் சபரியை பார்த்து நிலவரத்தை தெரிந்து கொள்ளலாம் என்று எண்ணினான் .

போகிற வழியில் ரோஜா எனும் பூங்குழலி, கண்மண் தெரியாமல் ஓடி வந்து அவன் மீது மோதி மயங்கி விழுந்தாள்.சூரி அவளை தாங்கி பிடித்து,கன்னத்தில் தட்டி எழுப்பி பார்த்தான். அவள் கண் திறக்கவில்லை.

தூரத்தில் யாரோ ஒரு வயதான பெரியவர் நடந்து போவதைக் கண்டு,

“ஐயா பெரியவரே கொஞ்சம் இப்படி வாங்க இந்த பொண்ணு மயங்கி விழுந்திருச்சு.”என்று அவரை நோக்கி உரத்த குரலில் கத்தினான். அவரும் சூரியின் குரல் கேட்டு அவனை நோக்கி வந்தார்.பூங்குழலியை பார்த்துவிட்டு, அவசரமாய் ஓடி சென்று எங்கிருந்தோ தண்ணீர் கொண்டு வந்து,

அவள் முகத்தில் தெளித்து,

“அம்மா.... அம்மா”கன்னத்தில் சற்று பலமாக தட்டினார்.பூங்குழலி மெதுவாக கண்களை திறந்து இருவரையும் பார்த்தாள். அவளுடைய முகம் களைப்பையும் கண்கள் பலவீனத்தையும் பிரதிபலித்தன. சூரி அவளைக் கைத்தாங்கலாய் பிடிக்க மெல்ல எழுந்து கொண்டாள்.

“உங்க உதவிக்கு ரொம்ப நன்றிங்க ஐயா”சூரி கூறினான்.

“இருக்கட்டும் தம்பி இதுல என்ன இருக்கு, ஆமா தம்பி ஊருக்கு புதுசா பேர் என்ன ...?” பெரியவர் கேட்டார் .

“என் பெரு சூரி,ஊர் சென்னை” சூரி பதிலளித்தான்.

“என் பேரு கனகரத்தினம், ஊர்க்காரங்க, சுருட்டு ன்னு கூப்பிடுவாங்க” அந்த பெரியவர் பதிலுக்கு தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார்.

சூரி, கனகரத்தினம் என்கிற சுருட்டு உடன் பேசிக்கொண்டே பூங்குழலியை கைத்தாங்கலாக பிடித்தபடி நடந்து கொண்டிருந்தான் .

“சரி தம்பி டவுனுக்குப் போகனோம் நா கிளம்புறேன்.”பத்து நிமிடம் ஊர் கதைகளை பேசிய பிறகு சுருட்டு கிளம்ப எத்தனித்தான்.

ஆளை விட்டால் போதும் சாமி என்கிற நினைப்புடன் சூரியும் விடைபெற்றான்.

“ஆமா ரோஜா ....ரோஜா தானே உங்க பேரு .....?”சூரி,கேட்க அவளும் ஆமாம் என்று தலையசைத்தாள்.

“ஏன் இப்படி கண்ணு மண்ணு தெரியாம ஓடி வந்து மயங்கி விழுந்தீங்க என்ன ஆச்சு .....?”சூரி கேட்டான்.

“ஒன்னும் இல்லைங்க உதய் சார பாக்கலாம்னு ஆஸ்பத்திரிக்கு போயிட்டு இருந்த, வழியில யாரோ நாலு பேர் என்னை துரத்திட்டு வந்தாங்க, பயத்தில ஓடி உங்க மேல மோதி, மயங்கி விழுந்துவிட்ட.”ரோஜா எந்த தடுமாற்றமும் இன்றி சொன்னாள்.

“ஆமா அந்த நாலு பேரு உங்கள எதுக்கு துரத்தனம்.”சூரி

“வயசு பொண்ணு, அழக இருக்க, எதுக்கு துரத்துவாங்க”ரோஜா அவன் கண்களை ஊடுருவிப்படி சொன்னாள். அவனும் சரி என்பதுபோல் தலையசைத்துவிட்டு,

“ஆமாம் இப்ப நீங்க எங்க போகணும்.....?”சூரி ரோஜாவிடம் கேட்டான்.

“உதய் சார பாக்க ஹாஸ்பிடல் போகணம்”ரோஜா பதிலளித்தாள்.

“வாங்க நானும் ஹாஸ்பிடல் தான் போறேன்.”சூரி சொல்ல ரோஜாவின் முகம் லேசாய் கறுத்தது.இருவரும் பத்தடி கூட நடக்கவில்லை ரோஜா சற்றென்று சிறிய சைஸ் பேரஃபியூம் பாட்டில் போன்று ஏதோ ஒன்றை எடுத்து அவன் முகத்தில் அடிக்க தயாரானாள் .சூரி அவள் கைகளை லாவகமாய் பிடித்து அவள் முகத்திலேயே அதை ஸ்பிரே செய்ய, மயங்கி சரிய போனவளை தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

” எங்கடா போன ...?”சபரி, சூரியை பொறுமையற்றவனாய் கேட்டான்.

“சொல்றேன் .....,உதய்க்கு எப்படி இருக்கு ....?,அந்த சூரணத்தை குடுத்தியா .....?,டாக்டர் என்ன சொன்னாரு ....?,உதய்யோட அம்மா எப்பிடி... இருக்காங்க?”சூரி கேள்வி மேல் கேள்வியை அடித்துக்கொண்டே சென்றான்.

“குடுத்தேன் நல்ல இருக்காரு, தூங்கிட்டு இருக்காரு,இனிமேதான் டாக்டர் வருவாரு, ராணி அம்மாவும் நல்லா இருக்காங்கனு நர்ஸ் சொன்னாங்க ”சபரி, சூரியின் அனைத்து கேள்விகளுக்கும் ஒரே

மூச்சில் பதிலளித்தான்.

“யாராவது வந்தாங்களா .....?”சூரி குரலை தழைத்தபடி கேட்டான் .இல்லை என்று சபரி மெலிதாய் தலையசைத்தான்.

இருவரும் பேசிக்கொண்டிருக்கும் பொழுது டூட்டி டாக்டர் வந்து உதய்யை பார்த்தார் .

“இஸ் ஆல் ரைட், நைட் டிஸ்டன்ஸ் பண்ணிடலாம் .” டாக்டர் கூறிவிட்டு வெளியேற,சூரி அவர் பின்னால் ஓடியபடி

“டாக்டர் ஒரு நிமிஷம்” என்றான்.

கை கடிகாரத்தை பார்த்தபடி டாக்டர்,

“சொல்லுங்க”என்றார்.

”உதய்க்கு என்ன ஆச்சு ....?,திடீர்னு எப்படி இப்படி .....?சூரி சற்று இழுத்தபடி நிறுத்தினான்.

“பேலன்ஸ் டிஸ் ஆர்டர்”டாக்டர் கூறினார்.

“சாரி எனக்கு புரியர மாதிரி செல்லுங்க பிளிஸ்.” சூரி கேட்டான் .

“நீங்க யாரு ....?”டாக்டர் ,சூரியிடம் கேட்டார்.

“ சூரி பாபு.... சிபிஐ” சூரி போலீஸ் மிடுக்கோடு கூறினான்.

“ராமா .....பேஷண்ட்டுக்கு யாருன்னு கேட்டேன்...?”டாக்டர் கூறினார்.

“உதய்க்கு வேண்டியவன்”சூரி சொன்னான்.

” ஓகே கொஞ்சம் டெக்னிக்கல புரிஞ்சுக்க கஷ்டமா இருக்கு, முடிஞ்ச அளவு ஈஸியா சொல்றேன்

.

இதயம் சம்பந்தமான பாதிப்பு, தீடிர்னு உயர் இரத்த அழுத்தம் அல்லது நரம்பு மண்டல பாதிப்பால வரக்கூடிய சமநிலைச் சீர்கேடு . இதில சில வகைகள் உண்டு. இது மனநல தொடர்பாலயும் சில சமயம் வரும் அப்படி வரத மெண்டல் பேலன்ஸ் டிஸ் ஆர்டர்னு சொல்லுவோம் .’ ’டாக்டர்,சூரிக்கு விளக்கமளித்தார்.

“இது எப்படி திடீர்னு வந்துச்சு .....?”சூரி தன் சந்தேகத்தை கேட்டேன்.

“ம்மம்.... டிரக்ஸ் எதாவது எடுத்திருக்கலாம், இல்ல தப்பான மெடிசன் சாப்பிடலாம், திடீர்னு ஏதாவது மெண்டல் பிரஷர் வந்திருக்கலாம். நிறைய காரணம் இருக்கு.”டாக்டர் கூறினார்.

“இப்போ உதய்யோட கண்டிஷன் எப்படி இருக்கு?”சூரி கேட்டான்

“நார்மலா தான் இருக்கு, நல்லா ரெஸ்ட் எடுக்கட்டும், ரிலாக்ஸா இருக்கட்டும்,நா சில மெடிசன் எழுதியிருக்க, குடுங்க பாத்துக்கலாம் . டோன்ட் வொரி.”டாக்டர் கூறினார்.

“தேங்க்யூ டாக்டர்”சூரி தெரிவித்தான்.

உதய்யை டாக்டர் டிஸ்சார்ஜ் செய்ய, அவனை, அழைத்துக்கொண்டு நண்பர்கள் இருவரும் உதய் காரிலேயே அரண்மனைக்கு திரும்பினார்.

உதய்க்கு மருத்துவர் பரிந்துரைத்த மாத்திரைகளோடு,வேலன் கொடுத்த சூரணத்தையும் கொடுத்து அவனை உறங்க வைத்துவிட்டு சபரி வெளியே வந்தான்.

“உதய் சாப்பிட்டு தூங்கிட்டார....? சூரணம் குடுத்தியா .....?”சூரி ,நண்பரிடம் கேட்டான்.

“ம்ம....ம்”சபரி கூறினான்.

“ஓகே என்கூட வா .....”சூரி, சபரிக்கு உத்தரவிட்டு முன்னே நடந்தான்.

என்ன, எதற்கு என்று எதுவும் புரியாமல் சபரியும் சூரியை பின்தொடர்ந்தான்.

சூரி அவர்கள் தங்கியிருந்த அறையை அடைந்தான். கதவை திறந்ததும், பூங்குழலி நாற்காலியோடு சேர்த்து கைகள்,கால்கள் கட்டப்பட்டடு, வாயில் பிளாஸ்திரி ஒட்டப்பட்ட, நிலையில் மயங்கி கிடந்தாள் .

“அவ என்னடா பண்ண ....?ஏன்டா கட்டி போட்டு வெச்சிருக்க ...?”சபரி சற்றென்று அலறினான்

.

“ஹீரோ சார் ரொம்ப எமோஷனலாகதீங்க, நடந்த கதைய மெதுவா கேளுங்க”சூரி சற்று நக்கலாடித்துவிட்டு நடந்தவற்றை ஒவ்வொரு காட்சியை விவரித்தான்.

” காலையில ஒன்ன, ஒருத்தன் முகமூடி போட்டு அடிக்க வந்தான். இவ வேற ஒன்ன தீர்த்துக்கட்ட திட்டம் போட்டிருக்கா போல ”.சபரி தன் அதிர்ச்சியை வெளிப்படுத்தினான்.

“இல்லடா இவங்கள ஒரே குரூப்னு தோணுது”சூரி தன் சந்தேகத்தை கூறினான்.

" நீ இன்னிக்கு தான் வந்த உன்னை எதுக்கு அவங்க அடிக்கணும் என்ன பிரச்சனை உனக்கும் அவங்களுக்கும் "சபரி விருப்பத்தோடு தெரிவித்தான்.

நண்பர்கள் பேசிக் கொண்டே இருக்கும் பொழுதே பூங்குழலி கண்திறந்து இருவரையும் முறைத்தாள்.

"சின்ன மாரப்ப முதலி ஜமீனின் இளவரசிக்கு வந்தனம்"சூரி அடிக்குரலில் குத்துலோடு சொல்ல, பூங்குழலி அவனை கனத்த மனதோடு, விழிகளில் ஈரம் கசிய நோக்கினாள். சபரிக்கு, அவளைப் பார்க்க பரிதாபமாய் இருந்தது.சபரி அவள்,வாயில் ஒட்டடப்பட்டிருந்த பிளாஸ்திரியை விலக்கினான்.

"நா என்ன பண்ணேனு, இப்படி என்னை கட்டிப் போட்டு வச்சிருக்கீங்க ....?"பூங்குழலி கோபத்தோடு கேட்டாள்.

"மன்னிச்சிடுங்க இளவரசி கண்டிப்பா அவுத்து விட்டுற, என் மூஞ்சில எதுக்கு ஸ்ப்ரே அடிக்க பாத்த ?,நீயா அடிச்சியா இல்ல யாராவது அப்படி பண்ண சொன்னாங்கள...?"சூரி , அவளிடம் கேட்டான்.

"சொல்ல முடியாது டா முடிஞ்சத பாரு"பூங்குழலி திமிரோடு பதில் சொன்னாள்.

"சரிடா சபரி, அவ எதுவும் சொல்லமாட்டா, கேசு போட்டு உள்ளே தூக்கிப் போட்டுருவோம்."சூரி குத்தலும் இளக்காரமுமாய் சபரியை பார்த்து சொன்னான் .

"போலீஸ்காரன்ன எது வேணாலும் பண்ணலாம் நினைச்சீடு இருக்கீங்களா.....? எங்களுக்கு ஆள் இருக்கு"பூங்குழலி வெடுக்கென்று சொன்னாள்.

"உனக்கு ஆள் இருந்துமா, உங்க அண்ணன் ஜெயில்ல இருக்கா ....?"சூரி சொல்ல அவள் முகம், விவரிக்க இயலா துக்கத்தை வெளிப்படுத்தியது.

"உங்களுக்கு எப்படி தெரியும் ....?"பூங்குழலி அழுகையை கட்டுப்படுத்தி கொண்டவளாய் கேட்டாள்.

"நான் போலீஸ்காரன்னு உனக்கு தெரிஞ்ச மாதிரி உங்க அண்ணன் ஜெயில்ல இருக்குறது எனக்கு தெரிஞ்சது ."சூரி போலீஸுக்குண்டான திமிரோடு சொன்னான்.

"ம்ம....எனக்கு எதுவும் தெரியாது.உதய்யோட மனைவி நிகிலா தான் உங்களை ஸ்பிரே அடிச்சி மயங்கி விழ வச்சி போன் பண்ண சொன்னா."பூங்குழலி அழுதபடியே சொன்னாள்.

"அதனால நிகிலாக்கு என்ன லாபம் ....?"சபரி ஆர்வமும் பதட்டமும் தோய்ந்த குரலில் கேட்டான்.

*“அதெல்லாம் எனக்கு தெரியாதுங்க, அவ ஏ அண்ணனை காப்பாற்றன்னு சொன்னா.அதனாலதான் அவ சொன்னதை செஞ்சேன்.”பூங்குழலி கூறினாள்.*

*“நீ யாரு.... ஜமீனுக்கு எப்படி வாரிசு, உங்க அண்ணா எதுக்கு ஜெயிலுக்குப் போனான்.”சபரி உண்மையான ஆதங்கத்தோடு, பூங்குழலியிடம் கேட்டான்.*

*“நா எல்லாத்தையும் சொன்ன என்ன விட்டுவீங்களா ....?”அவள், சபரியிடம் கேட்க சபரி, சூரியை பார்த்தபடியே தயக்கத்தோடு தலையசைத்தான்.*

*அவர்கள் மூவரும் அரண்மனைக்குள் பேசிக் கொண்டிருந்த அதே சமயத்தில் , வேலன்,சபரியை அழைத்துச் செல்வதற்காக, பூட்டிய அரண்மனையின் பிரம்மாண்ட கேட்டுக்கு முன்பாக காத்திருந்தான்.*

*பூங்குழலியின் கைகால் கட்டுகளை சபரி மெல்ல அவிழ்த்து விட, அவள் ஆழ்ந்த பெருமூச்சு விட்டு தன்னுடைய கதையை சொல்ல தொடங்கினாள்.*

**தொடரும்** …….

## 7. மரகத வளரி (7)

பூங்குழலியின் தாத்தா வீரப்ப முதலியும் உதய்யின் தாத்தா குமரப்ப முதலியும் அண்ணன், தம்பி.

வீரப்ப முதலி புரட்சி சிந்தனை கொண்டவர். மண் மீதும் மக்கள் மீதும் அதீத பற்று கொண்டவர். ஜாதிய கட்டுப்பாடுகள் நிறைந்த காலகட்டத்தில் ,ஜாதி மீது அறவே நம்பிக்கை அற்றவர். சுயநலம் கருதாது அனைவருக்கும் உதவக்கூடியவர். எந்த பாகுபாடுமின்றி அனைத்து ஜாதியினரையும் சரிசமமாய் நடத்தியவர்.

ஆங்கிலேயே ஆக்ரமிப்பு வேர்விட்டு வளர துவங்கியிருந்த காலகட்டம் அது.

தாய்மண்ணை அன்னியனுக்கு விட்டுக் கொடுக்க முடியாது என்று தீவிரமாக இருந்தார் .

வீரப்ப முதலியின் தந்தையும் மற்றும் ஜமீனுமான அதிவீர வச்சிரபாகு முதலிக்கு ,வீரப்ப முதலியின் நடவடிக்கைகள் பிடிக்கவில்லை .

மகனை கூப்பிட்டு பலமுறை கண்டித்தார் .வீரப்ப முதலி, அதைப்பற்றி எல்லாம் பெரிதாக கவலைப்படாமல், சமத்துவம் ,சமரசம் என்று தன் பணியை தொடர்ந்து கொண்டிருந்தார்.

வீரப்ப முதலி ஒரு நாள் குடியானவர் பகுதியை பார்வையிட சென்றிருந்தார்.அவர் வரவை அறிந்து குடியான மக்கள் அனைவரும் கூடி நின்று மரியாதை செலுத்தினர்.

“மக்கா எப்படி இருக்கீக” வீரப்ப முதலி கம்பீரமான குரலில் கேட்டார்.

தாங்கள் அனைவரும் நன்றாக இருப்பதாய் மக்கள் அனைவரும் உரத்த குரலில் கத்தினார்.

“ஏன் இப்படி, எல்லாம் பூசி மோழுகி பேசுறிங்க ”கேட்டபடி ஒரு வயதான குடியானவரை விலக்கிக் கொண்டு இளம் பெண் ஒருத்தி வந்தாள்.

“ஏய் செவலி நீ பேசாம கெடா”வயதான குடியான பெண் அவளை அதட்டினாள்.

“த கிழவி துற கெட .”இளம்பெண் திருப்பி அவளை அதட்டிவிட்டு

“சின்ன ஜமீன் ஐயா..... நீக உதவி செய்றனு சொல்றிக,உங்க ஐய...பெரிய ஜமீன் எதுவுமே குடுக்க மாட்டீகிறாரு”என்று கோபத்தோடு முறையிட்டாள்.

“பெரிய எடுத்து பொல்லாப்பு உனக்கு எதுக்கு கஞ்சி காய்ச்சினம குடிச்சமனு இரு”மீண்டும் அந்தக் கிழவி செவலியை அதட்டினாள்.

“இத..... நா ஒருத்த இங்கே இருக்கல்ல மருவாதியா உண்மைய சொல்லுங்க”. வீரப்ப முதலி இருவரையும் தன்னுடைய கம்பீரமான குரலில் அடக்கினார்.

“சின்ன ஜமீன் அய்யா ……எங்களுக்கு கூலி சரியா கொடுக்க மாட்டேங்கிறாங்க, ஒரு நாள் முழுக்க வேலை செஞ்சா ஒருபடி நெல்லு தான் எங்களுக்கு கூலி அத வெச்சி ,நாங்க எப்படி கஞ்சி குடிக்க , நல்லது கெட்டது பார்க்க அது மாத்தமில்ல ... ய்யா,உங்க ஜமீனில காவல் காக்கிற காவலாளிகள் எங்க வூட்டு பொண்ணுங்கள முறைதவறி பேசுகிறாக,கேட்டா அடிக்கிறக, மழைக்காலத்துல கூர ஒழுவூது, மாத் தரேன்னு சொல்லி, ஆறு திங்க (ஆறு பௌர்ணமி /ஆறு மாதம் )ஆயிடுச்சு ,சோலி நடக்கல ”என்று செவலி நீளமாய் குற்றப்பத்திரிக்கை வாசித்து முடித்தாள்.எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு வீரப்ப முதலி,

“அடியே... இங்க வா, இந்த”என்று தன் கையில் இருந்த மோதிரத்தை கழட்டி அவள் மேல் தூக்கி போட்டார்.

” நடக்கறத தகிரியமா சொல்லி இருக்க .....நல்லா இரு ”என்று கூறிவிட்டு குறுக்கும் நெடுக்கும் ஐந்து நிமிடங்கள் யோசித்தவாறே நடந்தார்.

“வாளொலி எங்கல போன.....?”என்று கர்ஜித்தார். வாளொலி,பெரிய ஜமீன் அதிவீர வச்சிர பகுவின் மெய்க்காப்பாளன்,
வீரப்ப முதலியை விட 8 வயது பெரியவன். வீரப்ப முதலிக்கு நெருங்கிய நண்பனும் ஆவான். பெரிய ஜமீனும் அவனை மெய்க்காப்பாளன் என்று கருதாமல், ஒரே ஜாதி என்பதால் நண்பன் போலவே நடத்தி வந்தார்.

வீரப்ப முதலி எந்த பாகுபாடுமின்றி ஜாதிய பேதங்களின்றி, வளொலியிடம் உண்மையான நட்பையும் அன்பையும் பாராட்டி வந்தார்.

“நீ சனங்க மேல ஒரு கண்ணு வச்சுக்கோ என்ன வேணும் ஏது வேணும்னு கவனி”வீரப்ப முதலி ,வாளொலிக்கு உத்தரவிட்டார் .

“ஏய் நிறுத்து.... நிறுத்து என்ன உன் கதையை கேட்ட சம்பந்தமில்லாமல் என்னென்னமோ சொல்லிக்கிட்டு இருக்க”சூரி பாபு, பூங்குயியை கத்தினான்.

“ஆமாங்க இந்த கதை கொஞ்சம் போரடிக்குது நீங்க உங்க கதைய மட்டும் சொல்லுங்க ப்ளீஸ்”சபரி கொஞ்சுவது போல் சொன்னான் .
“அடேய் ரொம்ப கொஞ்சாத விசாரண முடியிற வரைக்கும் அவ அக்யூஸ்ட் ”சூரி,

சபரியிடம் அடித்தொண்டையில் கோபித்துக் கொண்டான்.

“எங்கப்பா பஜாருல்ல கடை வச்சீருந்தாரு எனக்கு ஒரு 12 வயசு இருக்கும், ஒரு நாள் திடீர்னு அப்பாக்கு நெஞ்சு வலி அம்மா ஹாஸ்பிட்டல் கூட்டிட்டு போனாங்க, அன்னிக்குதான் நான் அப்பா உயிரோட பார்த்தது……”பூங்குழலி இறந்துபோன தந்தையின் நினைவாக கண்ணீர் பூத்தாள்.

“இப்போ உங்களுக்கு என்ன வயசு ??”சூரி வழிந்தான்.
” வாய மூடுடா, இப்ப மட்டும் அவ அக்யூஸ்ட் இல்லையா ....?”சபரி பழி தீர்த்துக் கொண்டான்.
பூங்குழலி இருவரையும் ஏற இறங்க பார்த்துவிட்டு தன் கதையை தொடர்ந்தாள்.

குழலியின் தந்தை இறந்த பிறகு அவளுடைய தாய் கலைச்செல்வி தனியாளாய் கடை நடத்தினாள். குழலியையும் அவளுடைய அண்ணன் செங்கதிர்வேலையும் வறுமை மற்றும் பற்பல சிரமங்களுக்கிடையே போராடி கல்லூரி வரை படிக்க வைத்தாள்.

கதிர் கல்லூரி படிப்பு முடித்து, கிடைத்த ஏதோ ஒரு வேலையில் சேர்ந்திருந்தான்.
பூங்குழலி இளங்கலை இறுதியாண்டு படித்துக் கொண்டிருந்தாள்.
குழலியின் அம்மா கலைச்செல்விக்கு திடீரென்று ஏதோ உடல்நலக் குறைவு ஏற்பட்டு, மருத்துவமனையில் சேர்க்கப்பட்டாள்.

“உங்க அம்மாக்கு சில டெஸ்ட் எழுதிருக்கேன், சீக்கிரம் பண்ணிடுங்க”மருத்துவர் கூற, அண்ணன் தங்கை இருவருமே கலங்கிபோயினர்.

டெஸ்டின் முடிவுகள் கலைச்செல்விக்கு கேன்சர் என்றது.

“உனக்கு சம்பளமே கம்மிதான் குடும்பம் நடத்தினம், நா,படிக்கணும் ,இப்ப புதுசா வைத்திய செலவுகள் எப்படி முடியும்”பூங்குழலி கலங்கிய கண்களுடன் அண்ணனின் தோளில் சாய்ந்துகொண்டாள்.

“நீ கவலைப்படாத , நல்லா படி நான் பார்த்துக்கிறேன்.”பூங்குழலிக்கு கதிர் ஆறுதல் கூறினான்.

கலைச்செல்வி இரண்டாண்டுகள் கேன்சரோடு போராடினாள்.
மருத்துவச் செலவு விண்ணைத் தொட்டது.
கதிர் தனியாய் நின்று எல்லாவற்றையும் சமாளித்தான்.

நோய் முற்றி திடீரென்று கலைச்செல்வி ஒருநாள் இறந்தும் போனாள்.

“அப்புறம் என்ன ஆச்சு?, நீங்க எப்படி இங்க வந்தீங்க ....?”சபரி அனுதாபத்தோடு கேட்டான்.

“அம்மா தவறி, ரெண்டு மூணு நாள்ல எங்க அண்ண காணோம் .” பூங்குழலி சோகம் ததும்பிய குரலில் சொன்னாள்.

“சரி நீ எப்படி ஜமீனுக்கு வந்த”சூரி கேட்டான்.

“எனக்கு தெரிஞ்சவங்க மூலம் எங்க அண்ணனை நா தேடிட்டு இருந்தேன்,அப்பதான் நிகிலா ஒரு நாள் வந்தா,எங்க அண்ணன் செய்யாத தப்புக்கு ஜெயில்ல இருக்கிற தாகவும், அவ எனக்கு பாதுகாப்பான வேலையும் தங்க இடமும் ஏற்பாடு பண்ணி இருக்குறதா சொன்ன.....”பூங்குழலி கூறினாள்.

“அவ சொன்னதும் நீ நம்பிட்டியா!”சூரி பாபு நக்கலாய் கேட்டான்.

“இல்ல நா எங்க அண்ண நேர்ல பார்த்தா தான் நம்புவேன் அவகிட்ட ரொம்ப பிடிவாதம் பிடிச்ச, அவளும் ஜெயிலுக்குள் கூட்டிடு போய் எங்க அண்ண காமிச்சா எங்க அண்ணனும் நிகிலா சொல்றதைக் கேளு ,இப்பத்திக்கு நீ பாதுகாப்பா இருக்கணும் அதான் முக்கியம்னு சொன்னாரு .நிகிலா எங்கண்ணன் எப்படியாவது வெளியில கொண்டுவர ன்னு சத்தியம் பண்ண அவளுக்கு தெரிஞ்சவங்க மூலமா இந்த ஜமீன் ல எனக்கு வேலை ஏற்பாடு பண்ணி இருக்குறதா சொல்லி இங்க அனுப்பி வச்சா”பூங்குழலி சொன்னாள்.

“ஆமா நீங்க இங்க என்னவா வேலை பாக்குறீங்க”.சபரி

“என்னடா பெரிய வேலை தமிழ்ல சொன்னா ஆயா வேலை, இங்கிலீஷ்ல கேர் டேக்கர் .”சூரி தன்னுடைய கைகளை பேன்ட் பாக்கெட்டுக்குள் திணித்துக் கொண்டு ,நக்கலான தொனியில் சொன்னான்.

பூங்குழலி அவனை வெறித்துப் பார்த்துவிட்டு ஆம் என்பது போல் தலையை அசைத்தாள்.

“உனக்கு ,நிகிலா எப்டி உதய் கல்யாணம் பண்ணனு தெரியுமா …....?”சூரி என்றான்.

“எனக்கு அதெல்லாம் தெரியாதுங்க, போன மாசம் திடீர்னு உதய்... கல்யாணம் பண்ணிட்டு இங்க வந்தா ,என்னை தெரியாத மாதிரி நடந்துக்கிட்டா, எனக்கு ஒரு புது சிம் வாங்கி கொடுத்து ஏதாவது முக்கியமான விஷயம்ன எனக்கு மெசேஜ் பண்ணு போதும்னா. இன்னைக்கு காலையில தான் அவ என்ன நேர்ல பார்த்து பேசினா அதுக்குள்ள இப்படி ஆயிடுச்சு.”சூரி பாபுக்கு ஒழுங்கு காட்டியபடியே சொன்னாள்.

“ஓகே மிஸ். பூங்குழலி நீங்க சொல்றதெல்லாம் ஏதாவது ஆதாரம் இருக்கா?”சூரி சண்டையில் தொனியில் கேட்டான்.

“என்ன மாதிரி ஆதாரம்? எதுக்கு ஆதாரம் ?”பூங்குழலி எரிச்சலோடு கேட்டாள்.

“நீங்க ஜமீனோட வாரிசுங்கறத்துக்கு ,நிகிலா உன்ன அனுப்பிச்சாங்கரத்துக்கு”சூரி கேட்டான்.

“என்கூட வாங்க”பூங்குழலி இருவரையும் தன்னுடைய அறைக்கு அழைத்து சென்றாள் ,நிதானமாய் தன் பெட்டியை திறந்து,

“இது எங்க தாத்தா வீரப்ப முதலி பக்கத்தில சின்ன தாத்தா வேலப்ப முதலி,

இது எங்க அப்பா ராசப்ப முதலி, அம்மா கலைச்செல்வி, இது அண்ணன் செங்கதிர், இது நான் பூங்குழலி தேவி” கருப்பு-வெள்ளை புகைப்படங்கள் மற்றும் இரண்டு வண்ணப் படங்களையும் எடுத்து வரிசையாய் காண்பித்தாள் .

உதய்யும் செங்கதிரும் கிட்டத்தட்ட ஒன்றுபோல் இருந்தனர்.

பழைய ஜமீன் அதி வீரபாகு கட்டுமஸ்தான உடலுடன் நின்றிருக்க அருகில், பனிரெண்டு, பதினெட்டு பிராந்தியத்தில்

வீரப்ப முதலி மற்றும் வேலப்ப முதலி நின்றிருந்தனர் .அதே போல் ஒர் புகைப்படத்தை சபரி ,மியூசியத்தில் பார்த்ததாய் நினைவுகூர்ந்தான்.

அதை ஜாடையில் சூரியிடமும் குறிப்பு உணர்த்தினான்.

“சரி நீங்க இந்த ஜமீனோட இளவரசினு நிக்லாக்கு தெரியுமா? உங்க அண்ணனுக்கு தெரியுமா?”சபரி கேட்டான்.

“அண்ணனுக்கு தெரியும், அம்மா அப்பா சின்ன வயசிலேயே சொல்லிதான் வளர்த்தாங்க ,நிகிலாக்கு தெரியுமானு எனக்கு தெரியாது .”பூங்குழலி குழப்பத்தோடு சொன்னாள்.

“ஆமா நிகிலா யாரு ....?அவளுக்கு எப்படி உங்க அண்ண தெரியும் .அவ எதுக்கு வலியவந்து உங்களுக்கு உதவி செய்யணும்.”சூரி கேட்டான்.

“ஹலோ சார் இந்த கேள்விக்கு மட்டும் இல்ல நீங்க கேட்கிற எந்த கேள்விக்கும் எனக்கு பதில் தெரியாது. எனக்கு தெரிஞ்ச எல்லாத்தையும் உங்க கிட்ட சொல்லிட்ட”பூங்குழலி பொங்கி வந்த ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு சொன்னாள்.

“ரைட் இளவரசி, இப்போ உங்களோட அடுத்த பிளான் என்ன ...?”சூரி கூறினான்.

“நக்கலா ......?இல்ல, நக்கலானு கேட்கிற...?”பூங்குழலி சீறிக் கொண்டு வந்தாள்.

“மேடம் ஏன்..... கூல் ,சும்மா விளையாட்டுக்கு தான் கேட்டேன்”சூரி சாதாரணமாய் கூறினான்.

“ஆமா நிகிலா எதுக்கு சூரி ...ய மயங்க வைக்க சொன்னா ....?”சபரி கேட்டான்.

“எனக்கு தெரியாதுங்க, உதய்யோட உயிருக்கு ஆபத்து இருக்குன்னு சொன்னா ,என்னையும்

கவனமா இருக்க சொன்ன, சூரி போலீஸ்காரருனு அவரால ஜமீனுக்கு ஏதாவது ஆபத்து வரும் சொன்னா ,எப்படியாவது கடத்திக் கொண்டு வர சொன்னா.என்னால முடியாதுன்னு சொன்ன,சரி நீ மயக்க வச்சிரு, மத்தத நா பார்த்துகிறன்னு சொன்னா, அவதான் மயக்கமருந்து குடுத்தா''பூங்குழலி கூறினாள்.

''ஜமீன்னா யாரு ..?''சூரி கேட்டான்.

''உதய் கிருஷ்ணா''பூங்குழலி கூறினாள்.

''அப்புறம் என்னங்க ஆச்சு ...?''சபரி பரிவோடு கேட்டான்.

''அப்புறம் என்..ன அப்புறம் ....உங்க பிரெண்டு கிட்ட மாட்டிக்கிட்ட''சலிப்பும் ஏமாற்றமும் கலந்த குரலில் சொன்னாள்.

''சரி நீ நிகிலாக்கு போன் போட்டு நான் உன்கிட்ட மாட்டிகிட்டேன் சொல்லு''சூரி சொல்ல இருவரும் புரியாமல் பார்த்தனர்.

''என்ன முழிக்கிறிங்க ,பூங்குழலி இன்னசென்ட்னு எனக்கு நல்லாவே தெரியும் ,நிகிலாவ பத்தி தான் சரியா எதுவும் தெரியல ,அதுக்கு நான் அவ இடத்துக்கு போகனம்.அதனால தான் சொன்னேன்.''சூரி பாபு தீவிர சிந்தனையுடன் சொன்னான்.

**தொடரும்.....**

## 8. மரகத வளரி (8)

பூங்குழலி, நிகிலாவை அலைபேசியில் அழைத்து,

“நி.....கிலா அவ மாட்டிக்கிட்டான் ” போலி உற்சாகத்துடன் கூறினாள் .

…………… ……….

“வா , ஓகே பாய்”பூங்குழலி கூறிவிட்டு அலைபேசியை அணைத்தாள்.

“நீங்க சொன்னபடியே சொல்லிட்ட, நேர்ல வரேன் சொன்னா”பூங்குழலி இருவரையும் பார்த்து பொதுவாக சொன்னாள்.

“ஓகே நீ போய் தூங்கு, நாங்க பாத்துக்குறோம் ,உதய மட்டும் கொஞ்சம் கவனமா பார்த்துக்கோ”சூரி கூறிவிட்டு சபரியுடன் வெளியே நடந்தான்.

“டேய் உன் பிளான் என்ன ...?”சபரி ஆர்வமிகுதியால் கேட்டான் .

“தெரியாது”சூரி மிக அலட்சியமாக பதில் சொன்னான்.

“தெரியாதா..... அவ ஒன்ன கடத்திட்டு போயிடுவா”சபரி சற்று பதட்டத்துடன் கூறினான்.

“அதெல்லாம் பாத்துக்கலாம் வா” சூரி அலச்சியமாக பதிலளித்தான். நண்பர்கள் இருவரும் பேசிக் கொண்டிருக்க, அரண்மனைக்கு வெளியில் ஏதோ வாகனத்தின் ஒலி கேட்டது.

“வந்துட்டா போல இருக்கு”கூறியபடியே சபரி வெளியே போக முயன்றான்.

“டேய் நில்லு”சூரி கூறிவிட்டு மயங்கி விழுந்தது போல் நடித்தான்.

சபரி அப்படியே திகைத்து நிற்க,

“டேய் என் கை கால கட்டி வாயில பிளாஸ்திரி போடு”சூரி, சபரியை ஏவினான்.

சபரி ,சூரி சொன்னது போலவே செய்ய ,

“நீ போய் ஒளிஞ்சி கோ”சூரி ,சபரியிடம் பிளாஸ்திரி ஒட்டுவதற்கு முன்னால் சொன்னான்.

நிகிலா மிக சுதந்திரமாய் உள்ளே வந்து, கட்டப்பட்டிருந்த சூரியை இரண்டு அடியாட்களை வைத்து தூக்கி சென்றாள்.

நிகிலா, சூரியை தூக்கிக்கொண்டு வாகனத்தில் ஏற்றி கிளம்புவதை ,சபரி மறைந்து நின்று பார்த்துக் கொண்டிருந்தான்.

சபரி தலையை வெளியே நீட்டி அவர்கள் சென்று விட்டார்களா ? என்று உறுதி செய்ய பார்த்தான்,.அரண்மனையின் கேட் பூட்டப்பட்டு அப்படியே இருந்தது, சபரிக்கு அவள் எப்படி உள்ளே வந்திருப்பாள்? என்று சந்தேகம் எழ, கேட்டை நோக்கி ஓடினான்.சமயம் பார்த்து காத்திருந்த வேலன், சபரியின் முகத்துக்கு முன்னால் காய்ந்த கசகசா இலைகளை நீட்ட, சபரி திக்பிரமை பிடித்தது போல் அப்படியே உறைந்து நின்றான்.

வேலன் பூட்டின் மீது எதோ களிம்பை தடவ அது திறந்து கொண்டது. அவன், சபரியின் கையை பிடித்து கொண்டு, சாமி இருக்கும் அந்த மரத்தடி சுரங்கப் பாதையை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

வேலன் மரத்தை அடையவும் பொழுது புலரவும் சரியாய் இருந்தது.

நிகிலா, சூரியை மர நாற்காலியோடு சேர்த்து கட்டி வைத்திருந்தாள் .

சூரி பாபுவும் மயக்கத்தில் இருப்பவன் போன்றே நடித்துக் கொண்டிருந்தான்.

“போலீஸ்கார் மிஸ்டர் போலீஸ்கார்” சூரியை நிகிலா அழைத்தாள் .

அவன் அமைதியாக நாற்காலியில் சரிந்தபடி கிடந்தான்.

“நடிச்சது போதும் எழுந்திரிங்க”நிகிலா எந்த ஆர்ப்பாட்டமும் இன்றி அமைதியான குரலில் சொன்னாள் .

சூரி பாபு கண்களை திறந்து அவளை உற்று நோக்கினான்.

“என்ன சார் .....?நீங்க எதுக்கு இவ்வளவு நேரம் மயக்கமான மாதிரி நடிக்கணும்”நேர்கோட்டில் அவன் விழியை சந்தித்த படி கேட்டாள்.

சூரி பாபு, அவளுக்கு எந்த பதிலும் சொல்லாமல் அமைதியாக அமர்ந்திருந்தான்.

“உங்களுக்கு எல்லா விஷயமும் தெரியும்னு எனக்கு பூங்குழலி மெசேஜ் பண்ணிட்டா, அது மட்டும் இல்ல நீங்க நேர்மையான போலீஸ்கரருனு தெரிஞ்சுகிட்டேன்.” நிகிலா கூறினாள்.

“தெரிஞ்சிருச்சுல்ல கட்ட அவு விட்டரது”சூரி கேட்டான்.

“நீங்க என்ன பத்தி என்ன தெரிஞ்சுக்க விரும்புகிறீங்க.....?”நிகிலா, சூரியை நாற்காலியிலிருந்து விடுவித்தபடியே கேட்டாள் .

*“நீ யாரு ...?பூங்குழலிக்கும் கதிருக்கும் நீ எதுக்கு வலிய போய் உதவி பண்ற ...?,எல்லாத்துக்கும் மேல ராணி அம்மாவுக்கு ஸ்லோ பாய்சன் வச்சது யாரு? உதய்யோட உயிருக்கு என்ன ஆபத்து இருக்கு....? யாரால ஆபத்து? என்ன எதுக்கு ஹாஸ்பிடல்ல வச்சி அடிக்க ட்ரை பண்ண...?இப்ப எதுக்கு கடத்திட்டு வந்திருக்க ...?”சூரிய பாபு கேள்விகளை அடுக்கிவிட்டு , தனக்கு வேண்டிய அத்தனை பதில்களையும் பெற, அவளை நோக்கியபடி நின்றிருந்தான்.*

*“அவளவுத கொஸ்டின்ஸ இன்னும் ஏதாவது இருக்கா ....? ம்மம..கடைசியா கேட்ட கொஸ்டின்ஸ்க்கும் ஈஸியா பதில் சொல்ல முடியும். முதல்ல கேட்ட கொஸ்டினுக்கு பதில் சொல்ல கொஞ்சம் நேரமாகும் பரவாயில்லையா ....?”நிகிலா கேட்டாள்.*

*“கடைசியாக கேட்ட ரெண்டு கேள்விக்கு முதல பதில் சொல்லிடு, அப்புறம் உன்னோட பிளாஸ்பேக ஆற அமர சொல்லு”சூரி பாபு கூறினான்.*

*” உங்கள ஹாஸ்பிடல் வச்சு அடிச்சது நான் இல்ல ,இன்னும் கேட்டா நீங்க ஹாஸ்பிடலுக்கு வந்ததே நீங்க சொல்லித்தான் எனக்குத் தெரியும்.*

*நான் உங்களை கடத்த நினைச்சது, நீங்க தப்பான வருன்னு நினைச்சு உங்களால தான் உதய்யோட உயிருக்கு ஆபத்துனு நினைச்சு .*

*ராணி அம்மாவுக்கு ஸ்லோ பாய்சன் வச்சது , யாருன்னு எனக்கு தெரியாது .*

*அடுத்தது உதய்யோட உயிருக்கு, மட்டுமில்ல,பூங்குழலி, கதிர், நீங்க ,நான் உங்க பிரெண்ட் சபரி எல்லாருமே ஆபத்தில தான் இருக்கோம்.”நிகிலா சற்று பதட்டமான தொனியில் சொன்னாள்.*

*சூரி பாபுவிற்கு மனதிற்குள் அவளை நம்புவதா வேண்டாமா என்ற குழப்பம் தலைதூக்கியது, இருந்தும் நம்புவது போல் நடிப்பது நலம் என்று நிச்சயித்துக் கொண்டு சரி என்பது போல் தலையசைத்தான்.*

*“சரி உன் பிளாஷ்பேக் என்ன?”சூரி கேட்டான்.*

*நிகிலா கைகளை கட்டி கொண்டு குறுக்கும் நெடுக்குமாய் சற்று நேரம் நடந்து விட்டு , புருவங்களை நெளித்து, உதடுகளை ஈரப்படுத்திக் கொண்டு ஆரம்பித்தாள்.*

***சாமியின் அரசம்***

*“வேலா கச்சிதமா கூட்டிட்டு வந்துட்ட”சாமி வேலனை பாராட்டினார் .*

வேலன், சாமியின் முன்பாக கைகட்டி மரியாதையோடு நின்றுகொண்டான்.

சபரி சற்று தெளிந்தவன் போல இருவரையும் மலங்க மலங்க பார்த்தான்.

“அந்த அஸ்வந்த்திகா தைலம் கலயத்தில் இருக்கு எடு ”சாமி, வேலனுக்கு உத்தரவிட்டார்.

அவனும் அதை எடுத்து பணிவோடு அவரிடம் நீட்டினான்.

“ம்...ம்ம அவன கிழக்க பார்த்து உட்கார வை ” சாமி கூறினான்.
வேலனும் சபரியை அவ்வாறு அமர வைத்தான்.

“இந்....த , இந்த தைலத்தை அவனோட உச்சந்தலையில் மூனு தடவ தேய்.” சாமி உத்தரவிட்டார்.
வேலனும் அவ்வாறே தேய்த்தான்.

வேலன் தேய்க்கத்தேய்க்க, சபரியின் கண்கள் ரத்த சிவப்பாய் மாறி அப்படியே மண் தரையில் சரிந்தான்.

**நிகிலா சூரியின் உரையாடல்**

“என்னோட அப்பா பிசினஸ் மேன், அப்பாவும் அம்மாவும் லவ் மேரேஜ்.”கூறிவிட்டு நிகிலா சூரியின் முகத்தை ஏறிட்டாள் .

அவன் முகம் அவளை முழுவதும் நம்ப வில்லை என்பதை நிகிலாவிற்கு உணர்த்தியது.

“உங்களுக்கு நான் சொல்றதுல நம்பிக்கை இல்லனு நல்லா தெரியுது.”நிகிலா வருத்தத்தோடு சொன்னாள்.
“அப்டிலாம் எதுவும் இல்ல மிஸஸ் உதய் சொல்லுங்க .”

சூரி அவளை மிஸஸ் உதய் என்று குறிப்பிட்டதும் அவள் முகத்தில் இனம் புரியாத ,குதூகலம்.சூரி அதை மனதிற்குள் குறித்து வைத்துக் கொண்டான் .

“நானும் உதய்யும் காலேஜ்ல ,கிளாஸ்மேட் ,
உதய்க்கு வேலை செஞ்சு தான் சாப்பிடனோங்கிற கட்டாயம் கிடையாது. இருந்தும் வேலைக்குப் போக ஆசைப்பட்டார். நான்தான் அவருக்கு வேலை அரேஞ்ச் பண்ணி கொடுத்தேன் .
பூங்குழலி சொல்லியிருப்பாளே ,அவளோட அண்ணன் கதிர் ஜெயில்ல இருக்கானு அதுவும் செய்யாத தப்புக்கு.” நிகிலா கேட்டாள்.

“ஆமா மிஸஸ் உதய் சொன்னா,என்ன தப்புன்னு கொஞ்சம் விளக்கமா சொல்லுங்களேன் நீங்க எதுக்கு அவங்களுக்கு உதவனும்”சூரி ,நிகிலாவிடம் விளக்கம் கேட்டான்.

"கதிர் என் பிரண்டோட பிரிண்ட், அவங்க அம்மாவுக்கு கேன்சர். சிரமபடுர குடும்பமுன்னு எனக்கு தெரியவந்தது. நான் எங்க அப்பாகிட்ட, அப்பரம் என் ஃப்ரெண்ட்ஸ் மூலமாகவும் கொஞ்சம் பணம் கலெக்ட் பண்ணி கதிருக்கு உதவுன. கதிருக்கு இந்த விஷயம் தெரிய வந்து நன்றி சொல்ல என்ன நேர்ல மீட் பண்ண வந்தான். நிகிலா , கதிர் தன்னை சந்தித்து கூறியவற்றை விளக்கத் தொடங்கினாள்.

**நிகிலா, கதிர் உரையாடல்**

"வணக்கம் மேடம் .நீங்க செஞ்ச உதவிய நான் மறக்கவே மாட்டேன் ரொம்ப நன்றி." கதிர் கூறினான்.

கதிரின் முகச்சாயல் நிகிலாவிற்கு யாரையோ நினைவூட்டியது .

"நீங்க யாருன்னு"நிகிலா கேட்டாள்.

"மேடம் நீங்க பைசா கொடுத்து ஹெல்ப் பண்ணிங்களே ......எங்க அம்மாக்கு கூட கேன்சர் கதிர் மேடம்" கதிர் விளக்கினான் .

"இல்ல நான் அத கேக்கல, உங்க பேமிலி பேக்ரவுண்ட் என்ன உங்க அப்பா ,அம்மா யாருன்னு கேட்டேன்."நிகிலா கேட்க கதிர் அமைதியாய் தலை குனிந்து நின்றான்.

"கமான் கதிர் சொல்லுங்க உங்களை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கு தயவு செஞ்சு சொல்லுங்க ."நிகிலா அவனைத் தூண்டி விட்டாள். **நிகிலாவும் சூரியும் பேசிக் கொண்டிருந்த அதே சமயம் ,அரச மரத்தின் அடியில்**

"என்ன சாமி இவ மயக்கம் போட்டுட்டான்."வேலன் சற்று கவலை தோய்ந்த குரலில் கேட்டான்.

"இன்னும் நாற்பது நிமிஷத்துல கண்ணு முடிச்சிடுவான்."சாமி கூறினார்.

"முழிச்சா அவனுக்கு ....." இழுவையோடு வேலன் நிறுத்தினான் .

"என்னுடைய குருநாதர் ஆசிர்வாதத்துல எல்லாம் நல்லபடியா நடக்கும் ."சாமி உறுதியான குரலில் நம்பிக்கையோடு கூறினார்.

சபரியின் மனத்திரையில் ஏராளமான முகங்கள் தோன்றி மறைந்தன.

அவன் நெற்றியை சுருக்கி , தலையசைத்து ,ஏதோ உளறினான்.

இப்பொழுது சலனமில்லாமல், அவன் மனத்திரையில் காட்சிகள் எழுந்தன.

கிட்டத்திட்ட சபரியின் வயதையொத்த ஓர் இளைஞன் கட்டுமஸ்தான உடலோடு,

வீரம் பொங்கும் முகத்தில் முறுக்கு மீசையோடு , கையில் வளரியை வைத்து பயிற்சி செய்து கொண்டிருந்தான் .

“வீரா ....”யாரோ அவனை உரக்க அழைக்கிறார்கள்.அவன் வளரியை அப்படியே வைத்துவிட்டு அவசரமாய் ஓடுகிறான்.

” ஐயா..”அவன் தன்னுடைய கம்பீரமான உடலை வளைத்து வணங்கியபடியே சொல்கிறான்.

“ஜமீனுக்கு பேராபத்து வரப் போகுதுடா ....”வீரப்ப முதலி, அவனிடம் எச்சரிக்கும் குரலில் சொல்கிறார்.

“என்ன ஆபத்து ஐயா?” அவன் பணிவாய் கேட்டான் .

“எல்லா எங்க ஐய்யன் செஞ்ச தப்பு”வீரப்ப முதலி கவலையோடு கூறினார்.

“அந்த பரங்கியர்களுக்கு இடம் கொடுத்த சொல்றீங்களா ஐயா?” வீர வாளொலி கேட்டான்

“ஆமா வீரா .....,அதோட பலனா அவங்க தமிழகத்தையே கொஞ்சம் கொஞ்சமா கபளீகரம் செய்யப் போறாங்க. அதுமட்டுமில்ல வடக்கிலிருந்து ஹைதர் அலி படை எடுத்து வராரரு”வீரப்ப முதலி விளக்கினார்.

“ஹைதர் அலி எதுக்கு நம்ம மேல படை எடுத்து வரணும்”வாளொலி ஆதங்கத்தோடு கேட்டான்.

”புதுக்கோட்டை சமஸ்தானம் இராயரகுநாத தொண்டைமான்..... ஆஸ்தி அதிகார மதப்புல, புத்திகெட்டு ஆபத்து தெரியாம பரங்கியர்களுக்கு ஆதரவு கொடுத்திருக்காங்க, அது தென்னாட்டுலையும் சரி, வடக்கையும் சரி நிறைய ஜமீன்களுக்கும் , பெரிய சமஸ்தானங்களுக்கும் பிடிக்கல, அதுமட்டுமில்லாம, ஹைதர் அலி நேரடியாவே பரங்கியரை எதிர்த்து போர் தொடுக்க ஆரம்பிச்சுட்டாரு, பரங்கியர்கள் நம்ப ஜமீனோட ஆதரவை கேட்டிருக்காங்க ,

எங்க அய்யன் தான் சமஸ்தானத்துக்கு ரொம்ப விசுவாசமாச்சே ,

என்னுடைய கணிப்புப்படி ஐயன் என்னையும் குமரப்பனயும் போருக்குப் போக சொல்லுவாருனு நினைக்கிறேன்.வீரப்ப முதலி நாட்டு நடப்பை வாளொலிக்கு பாடம் நடத்தி முடித்தார்.

“ஐ...யோ போர் வந்தா நாட்டு மக்களோட நிலைம.....?”வாளொலி பதறினான்.

“ஆமா வீரா ....அதுமட்டுமா, பெண்டு, பிள்ளைங்க தெருவில் நிற்கும் .கஜானா காலியாகும். சண்ட மனித குலத்துக்கு எப்போதுமே அழிவு தா... .”வீரப்ப முதலி உண்மையான வருத்தத்தோடு கூறினார்.

“இப்ப நாம்ப என்னங்கய்யா செய்ய போறோம்”வாளொலி கேட்டான்

அதுக்குத் தாண்டா நான் ஒரு திட்டம் வச்சிருக்கேன்.வீரப்ப முதலி கூறினார்.

வாளொலி ஆர்வமாய் அவர் செல்வதை  கேட்கத் தயாரானான்.

**தொடரும் ....**

## 9. மரகத வளரி (9)

**இன்று**

***நிகிலா,கதிர் உரையாடல்***

*“சின்ன மாரப்ப முதலி ஜமீனின் வம்சாவழியில் வந்த ஜமீன்தார் வீரவச்சிர பாகுவின் மூத்தமகன் வீரப்ப முதலியின் ஒரே பேரன்தா ராசப்பன் (ராசப்ப முதலி) என்னுடைய அப்பா.”*
*கதிர் சொல்ல நிகிலா சற்று அதிர்ந்து போனாள்.*

*“நீங்க என்ன சொல்ல வரீங்க கொஞ்சம் தெளிவா விளக்கமா சொல்லுங்க.” நிகிலா ஆர்வத்தோடு கேட்டாள்.*

*”மேடம் அந்தக் காலத்துல ,எங்க அப்பாவோட தாத்தா வீரப்ப முதலிக்கும் அவரோடு அப்பா, வீரவச்சிர பாகு முதலிக்கும் ஏதோ பெரிய பிரச்சனை*

*அது மட்டும் இல்ல தாத்தா வீரப்ப முதலி ரோசக்காரர், ரொம்ப நேர்மையானவர்.*

*மனைவி, குழந்தைகளோட ஜமீனவிட்டு வெளியேறிட்டாரு .ஜமீன்லருந்து ஒரு சல்லிக்காசு கூட எடுத்துக்கலயாம் ,அதுமட்டும் ல்ல என்னோட வாரிசுகள் யாரும் போய் நிற்கவும் கூடாதுனு தாத்தா அடிக்கடி சொல்லுவாராம் .கதிர் கவலையும் வருத்தமும் தோய்ந்த குரலில் பரிதாபமாய் கூறினான்.*

*“ஆமாம் கதிர் நீங்க சொல்லாமலே நல்லாவே தெரியுது.”நிகிலாவும் வருத்தப்பட்டாள்.*

*“ஆனா நீங்க சொன்ன ஒரு விஷயத்துதல ஒரு திருத்தம்.” நிகிலாவே தொடர்ந்தாள்.*

*“என்ன மேடம் ……என்ன மாதிரி திருத்தம் ?” கதிர் கேட்டான்.*

*“உங்கப்பா ஒரே பேரனில்ல.” நிகிலா கூறினாள்.*

*“பின்ன” கதிர் கேட்டான்.*

*“உங்க தாத்தாவோட அப்பா வீரப்ப முதலிக்கு ஒரு தம்பி இருந்தார்.*
*குமரப்ப முதலி.” நிகிலா சொன்னாள்*

*“எஸ் மேடம் அப்பா சொல்லி இருக்காரு.”கதிர் பதிலாலித்தான்.*

*“அவருடைய வம்சத்தில வந்தவங்கதான் இப்போ ஜமீனோட அதிகாரப்பூர்வமான வாரிசுகளா*

இருக்காங்க." நிகிலா சொன்னாள்.

"இருக்கட்டுமே அதனால் எனக்கென்ன வந்தது."கதிர் மிகச் சாதாரணமாய் சொன்னான்.

"என்ன கதிர் சொல்றீங்க, நீங்க இப்ப இருக்கிற நிலைமைக்கு உங்களுக்கு எவ்வளவு பணம் தேவை. நீங்க மட்டும் ஜமீனோடல வாரிசா இருந்திருந்தா?

உங்கப்பா பணமில்லாம கஷ்டப்பட்டு இருப்பாரா,ல்ல... நீங்க உங்க அம்மாவோட வைத்திய செலவுக்கு காசு இல்லாம கஷ்டப்படும்மா ....? ,நாளைக்கு உங்க தங்கச்சிக்கு நல்ல வாழ்க்கை அமைய வேண்டாமா? ,அது மட்டும் இல்ல உங்க தாத்தா ரொம்ப நேர்மையானவருனு சொல்றீங்க. அப்படி இருக்கும்போது அவர் ஜமீன்ல இருந்து வெளில வந்திருந்தா அதுக்கு கண்டிப்பா தகுந்த ஞாயமான காரணம் இருந்திருக்கும்.வீரப்ப முதலி தாத்தாயோட, அப்பா' வீரவச்சிரபாகு கண்டிப்பா ஏதாவது தப்பு பண்ணி இருப்பாரு. உங்க தாத்தாவோட அப்பா கோவிச்சுக்கிட்டு வெளிய வந்தாரு சரி அதுக்காக ரெண்டு மூணு தலைமுறை கடந்தும் கஷ்டப்படணமா அதுவும் நீங்க இருக்கிற நிலைமைக்கு....? " நிகிலா கேட்ட ஒவ்வொரு கேள்வியும் கதிருக்கு நியாயமாகப் பட்டது.

"நான் என்ன பண்ணம் ...?"கதிர் சற்று ஆவேசமாய் கேட்டான்.

***அன்று (சபரியின் மனத்திரையில் )***

வீரப்ப முதலி சொல்வதை, வெகு கூர்மையாய் கேட்டுக்கொண்ட வாளொலி ,

"ஐயா நான் உசுர கொடுத்தாவது ஊர காப்பாத்துவேன் ."வீர முழக்கம் செய்தான்.
அதை ரசித்தவாறு வீரப்ப முதலி உரக்க சிரித்தார் .

"ஐயா உங்கள ஐயன் வரச்சொன்னாரு."அவரை விழுந்து வணங்கிவிட்டு ஒரு குடியானவன் சொன்னான்.

வீரப்ப முதலி" **ம்ம**" என்று கர்ஜித்த வாரே எழுந்தார் .

"டேய் அந்த குடியான குட்டி எங்க இருக்குன்னு பாரு .....!" வீரப்ப முதலி கூறினார்.

"எந்த குடியான குட்டி? ங்க ஐயா" வீரப்ப முதலியை வணங்கிய குடியானவன் கேட்டான் .

"அன்னிக்கி குடியானவங்க கூட்டத்துல தகிரியமா உண்மைய பேசுச்சே அந்த குட்டி"வீரப்ப முதலி பதிலளித்தார்.

"சரிங்க ஐயா...." குடியானவன் பணிவோடு தெரிவித்தான்.

*“டேய் வெரச வந்து பார்க்க சொல்லு சொலி கிடைக்கு .”வீரப்ப முதலி கூறி விட்டு தன்னுடைய அரண்மனையை நோக்கி விரைந்து நடக்க தொடங்கினார்.*

***இன்று***

***நிகிலா,கதிர் உரையாடல்***

*நிகிலா தன் முன்னால் அமர்ந்திருந்த கதிரிடம் ,*

*”என்ன கதிர் சின்ன குழந்தை மாதிரி கேக்குறீங்க.*
*நீங்களும் உங்க சிஸ்டர் பூங்குழலியும் ஜமீனோட வாரிசு.*

*நீங்க அதை நிரூபிச்சி, ஜமீனோட அதிகாரப் பூர்வமான வாரிசாக உட்காரணும் .” என்றாள்.*

*” இப்ப என்கிட்ட காசு இல்ல. கேஸ் போட ”*
*கதிர் வருத்தப்பட்டான்.*

*” எங்கப்பா ஒரு லாயர். சோ இது விஷயமா நான் எங்க அப்பா கிட்ட பேசுற எங்க அப்ப கண்டிப்பா ஹெல்ப் பண்ணுவார். ” நிகிலா உறுதி அளித்தாள்.*

*“ஓகே மேடம் ஆனா ,எங்க அம்மாக்கு ரொம்ப உடம்பு சரி இல்லாம இருக்கு இப்போ இத பண்றது சரியா இருக்கும்னு எனக்கு தோனல.” கதிர் தன்னிலையை தெளிவுபடுத்தினான்.*

*“ஓகே கதிர் உங்க அம்மாவா நீங்க பாத்துக்கோங்க. நான் அப்பாகிட்ட இதப்பத்தி விளக்கமா சொல்றேன். இப்போ ஜமீனோட வாரிசு யாருனு நான் பாக்குறேன் .” நிகிலா கூறினாள்.*

*கதிர் ,நிகிலா சொல்வதை கேட்டுக் கொண்டிருந்தான்.*

*“நீங்க ஜமீனோட வாரிசுங்கிறத்துக்கு, உங்ககிட்ட என்ன மாதிரி ஆதாரங்கள் இருக்குன்னு நீங்க பாருங்க .” நிகிலா அவனை தயார்படுத்த முயன்றாள் .*

*” போட்டோஸ் இருக்கு ,எல்லாத்துக்கும் மேல, டிஎன்ஏ டெஸ்ட் இருக்கே அது போதாதா ....?” கதிர் அவசரமாய் கூறினான்.*

*“சூப்பர் கதிர் கண்டிப்பா டிஎன்ஏ டெஸ்ட் எடுத்தா, நீங்க ஜமீனோட வாரிசுங்கரத ஈஸியா ப்ரூப் பண்ணிடலாம்.*
*உங்க மொபைல் நம்பர் என்கிட்ட இருக்கு அப்பா கிட்ட பேசிட்டு நானே கூப்பிடுறேன்.” நிகிலா கூறினாள்.*

கதிர் ,நிகிலாவிடம் விடைபெற்றுக் கிளம்பினான் .

**அன்று(சபரியின் மனத்திரையில்)**

*“என்னடா வீரா .....நான் சொன்னபடி தகவல் சொல்லிட்டியா ....?”*

*வீரப்ப முதலி தன்னுடைய அரண்மனையின் விஸ்தாரமான தாழ்வாரத்தில் அமர்ந்தபடி, வீரவாளொலியை பார்த்து கேட்டார்.*

*அவனும் தன்னுடைய ஆறடி உயரத்தை மூன்று அடியாய் சுருக்கி மண்டியிட்டு அவர் காதருகில்*

*“சொல்லிட்ட ஐயா,முதல்ல கொஞ்சம் கோவபட்டாங்க. நான் நிலைமை எடுத்து சொன்னதுக்கு அப்புறம் அரை மனசா ஒத்துக்கிட்டாங்க.”என்றான்.*

*“ஐயா இத நீங்க சின்னராணி அம்மாகிட்ட சொல்லிட்டீங்களா .....?” வீரவாளொலி பணிவோடு கேட்டான்.*

*“இத எப்படி ஆரம்பிக்கறதுன்னு எனக்கு தெரியல டா? ,கொஞ்சம் கவலையாகவும் கலக்கமாவுருக்கு .” வீரப்ப முதலி கலங்கிய மனதுடன் கூறினார்.*

*“ஐயா வர சொன்னீங்களா? மேலத்தெரு துளக்கானம் சொல்லுச்சு.”செவலி கூறியபடியே வணங்கி, இரு கைகளையும் கட்டி ஒதுங்கி நின்றாள்.*

*வீரப்ப முதலி அவள் முகத்தை சற்று கூர்ந்து கவனித்து விட்டு*

*“ஏ குட்டி, என்ன பத்தி நீ என்ன நினைக்கிற?” என்றார்.*

*“நானொரு குடியானவ ,நா நினக என்ன கிடக்கு.” செவலி பயத்தோடு கூறினாள்.*

*“மனசுல பட்டத சொல்லு.” வீரப்ப முதலி அதட்டிக் கேட்டார்.*

*“ஜமீன் ஐயா நீங்களும் இந்த ஜமீன் குடும்பமும் எங்களுக்கு படியளக்கர சாமி.”செவலி பணிவோடு தெரிவித்தாள்.*

*“சாமி ஒன்னு கேட்டா நீ செய்வீயா ....?”வீரப்ப முதலி மிடுக்கோடு கேட்டார் .*

*“என்னங்கய்யா செய்யணும்.”செவலி பயந்த குரலில் கேட்டாள்.*

*“சத்தியம் பண்ணிக் கொடு.”வீரப்ப முதலி அழுத்தமான குரலில் கேட்டார்.*

“இது நீங்க போட்ட உப்தின்னு வளர்ந்த உடம்பு சாமி. உங்களுக்காக உசுரையும் கொடுப்பேன்.” செவலி உறுதி அளித்தாள்.

“கேட்டது பிரவு பேச்சு மாறக்கூடாது.”வீரப்ப முதலி கேட்டார்.

“சத்தியமா மாறமாட்டேன் சாமி சொல்லுங்க.”செவலி பணிவோடு கூறினாள்.

**இன்று**

நிகில தன் தந்தை தாயிடம் கதிருக்கும் தனக்கும் இடையே நடந்த எல்லா உரையாடல்களையும் விரிவாக எடுத்துக் கூறினாள்.

” சோ ஹெல்ப் பண்ணனும்னு முடிவு பண்ணிட்ட ” நிகிலாவின் அப்பா ராஜசேகர் கேட்டார்.

“கண்டிப்பா பா”நிகிலா சொன்னாள்.

“இப்ப அப்பாவ பர்மிஷன் கொடுக்கணுமா? லாயர அட்வைஸ் கொடுக்கணுமா ?”ராஜசேகர் கேட்டார்.

“ரெண்டுமே வேணும் பா.”நிகிலா சொன்னாள்.

“நமக்கு எதுக்கு இந்த வீண் வம்பு பேசாம நீ வேலைய பாரு.” நிகிலாவின் தாய் ஆனந்தி கூறினாள்

“நீயா இப்படி பேசுற ....?”நிகிலாவின் வார்த்தைகளில் கோபமும் ஆதங்கமும் ஒருசேர வெளிப்பட்டது.

“ஆன....ந்தி ,நம்ம பொண்ண பத்தி உனக்கு தெரியாதா? ,நீதான சொல்லுவ எங்க தாத்தாவோட நகல் என் பொண்ணுன்னு.உங்க தாத்தாவே இப்ப உதவி பண்ண சொல்றாருனு நெனச்சுக்கோ ” ராஜசேகர் மனைவியிடம் கூறினார்.

“அதுவுமில்லாம நமக்கு செய்யறதுக்கு கண்டிப்பா கடமை இருக்கு.” ராஜசேகர் மகள் பக்கம் பேச ஆனந்தி அமைதியாகிவிட்டாள்.

“தேங்க்யூ பா”நிகிலா அப்பாவின் கழுத்தை கட்டிக்கொண்டாள்.

அவரும் மகள் தலையை வருடியபடி,

“அந்தப் பையன கூட்டிட்டு வா, நான் நேர்ல பார்த்து பேசுற” ராஜசேகர் மகளுக்கு நம்பிக்கை அளித்தார்.

“கண்டிப்பா வர சொல்றேன் பா.”நிகிலா மகிழ்ச்சியோடு சொன்னாள்.

“அப்புற…மா அந்த சின்ன மாறப்ப முதலி ஜமீனோட வாரிசு தானே உன் பிரண்டு உதய்”ராஜசேகர் கூறுகிறனாள்.

“ஆமாம்பா இந்த விஷயத்த நான் சுத்தமா மறந்து போயிட்டேன்.” நிகிலா வருத்தப்பட்டாள்

“உதய் ரொம்ப நல்ல பையன், அவங்கிட்ட பேசுவோம் கண்டிப்பா சுமுகமா முடிஞ்சிடும்.”ராஜசேகர் கூற,
நிகிலா முகம் மலர ஆம் என்றாள்.

“சரிம்மா முடிஞ்சா உதய்யும் மீட் பண்ண ஏற்பாடு பண்ணு பார்க்கலாம்.” ராஜசேகர் கூறிவிட்டு எழுந்து உள்ளே சென்றார்.

“ஏண்டா உனக்கு அறிவு இருக்கா?”கதிருடைய நெருங்கிய நண்பன் தினகர் கேட்டான்.

கதிர்,நண்பனை கோபத்தோடு முறைக்க,
“என்னடா முறைக்கிற அவ ஏதோ காசு கொடுத்து ஹெல்ப் பண்ணா ஓகே, நீ ஜமீனோட வாரிசுனு நிரூபிக்கிறது சாதாரண விஷயமா ….?,உங்க அப்பா, தாத்தா, தாத்தா உடைய அப்பாவை எல்லாருமே போய் சேர்ந்துட்டாங்க .அம்மா உயிருக்கு போராடிக் இருக்காங்க. உனக்கு ஏதாவது ரெண்டுங்கெட்டான் ஆச்சுன்னா உன் தங்கச்சி தெருவுல நிப்பா யோசிச்சு பாரு”தினகர் கேட்டான்

“நீ சொல்றதை நான் யோசிக்காம இல்லடா.இப்ப எனக்கு நிறைய பணம் தேவை உனக்கே தெரியும் நான் என்ன பண்ண முடியும் சொல்லு ?”.கதிர் பதிலளித்தான்.

“டேய் நீ ஜமீன் பரம்பரையில் வந்து இருந்தாலும் நீ ஒரு சாதாரண ஏழை வீட்டு பையனைத்தான் வளர்ந்திருக்க,அவங்க பரம்பரை பணக்காரங்க அவங்கல எதிர்த்து உன்னால் என்ன முடியுனு யோசிச்சு பாரு.”தினகர் கூறினான்.

“நீ சொல்றது கரெக்ட் தா ஆனா,நிகிலா ரொம்ப ஸ்ட்ராங்கா சொல்லி இருக்காங்க.” கதிர் சொன்னான்

“டேய் பைத்தியக்காரா அவ யாருடா முதல்ல இந்த பிரச்சினையில,அப்படியே உனக்கு போய் கேட்கணும்னா, நீ முதல்ல அவங்களை போய் பாரு .உன் நிலைமையை எடுத்துச் சொல்லு ,அவங்க உனக்கு ஏதாவது பணம் உதவி செஞ்சா உனக்கு நல்லது தானே.அதுமட்டுமில்லை ஒரு கோடி ரூபா கேளு போது. அம்மாவோட வைத்தியச் செலவு, தங்கச்சியோட படிப்பு, கல்யாணம் உனக்கு ஏதாவது ஒரு பிசினஸ்க்கு அது போதும்.” தினகர், கதிரை குழப்பி விட்டான்

” நிகிலா கிட்ட சொல்ல வேண்டாமா ? ” கதிர் கேட்டான்

*“டேய்,அவளோட அப்பா பெரிய லாயர் ன்னு சொல்ற, நீ லீகல போனா அங்க எதுவுமே தர மாட்டாங்க.கண்டிப்பா பிரச்சனை வேற மாதிரி திரும்பும். நான் சொல்றதை சொல்லிட்டேன் அப்புறம் உன் விருப்பம்.”தினகர் பேசி முடித்து விட்டுக் கிளம்பினான்.*

***அன்று ( சபரியின் மனத்திரையில் )***

*“சா.....மி ,ஐயா நீங்க சொல்றபடி செஞ்சா குடியான குடில ஒரு உசு கூட இருக்காது .”செவலி அழுதபடியே சொன்னாள்.*

*“ஏ குட்டி பயப்படாதே, நான் இருக்கேன் வீரா இருக்கான்.”வீரப்ப முதலி தைரியம் கூற முனைந்தார்.*

*“இலங்கையா... அணிக்கு குடியானவங்க குறைய சொன்னதுக்கே, உங்க ஐயன் ஆளுங்களோட வந்து அந்த கத்திட்டு கத்திட்டு போனாரு .” கூறிவிட்டு அவள் மண்டியிட்டு அழுதாள்.*

*வீரப்ப முதலி அவளை எப்படி சமாதானப்படுத்துவது? எப்படி தன் காரியத்தை நிறைவேற்றுவது? என்று யோசித்தபடியே அமர்ந்திருந்தார்.*

**தொடரும் .....**

# 10. மரகத வளரி (10)

**இன்று**

*கதிருடைய அலைபேசி எண்கள் தொடர்ந்து ஐந்து நாட்களாக சுவிட்ச் ஆப் செய்யப்பட்டுள்ளது என்று பதிவு செய்யப்பட்ட குரல் நிகிலாவை எரிச்சலூட்டியது.*

*“என்னம்மா இன்னிக்காவது கதிர் கிட்ட பேசுனியா .....?”ராஜசேகர் கேட்டார்.*

*“இல்லப்பா கதிரோட நம்பர் சுவிட்ச் ஆப் னு வருது .”நிகிலா கூறினாள்.*

*“சரிமா போன் ஏதாவது ரிப்பேர் ஆயிருக்கும்.அவங்கிட்ட ரிப்பேர் பண்ண காசு இருந்திருக்காது.நேர்ல போய் பாத்துட்டு வா.” ராஜசேகர் சொன்னார்.*

*“ஓகே பா உடனே பாத்துட்டு வந்து சொல்றேன்.” நிகிலா கூறினாள்.*

*நிகிலா அப்பாவிடம் கூறி விட்டு காரை எடுத்துக் கொண்டு கிளம்பினாள்.*

*சிறிது தூரம் காரை இயக்கிய பிறகு தான்*
*கதிருடைய அலைபேசி எண்கள் மட்டுமே தன்னிடம் உள்ளது என்றும் முகவரி தெரியாது என்றும் அவளுக்கு மண்டையில் உறைத்தது.*

*கதிரை அறிமுகம் செய்து வைத்த தோழியின் இல்லத்திற்கு காரை விட்டாள்.*

*தோழியும் நிகிலாவை சம்பிரதாயங்களுடன் வரவேற்று உபசரித்தாள்.*

*“பிரியா உனக்கு கதிர் அட்ரஸ் தெரியுமா ....?”நிகிலா கேட்டாள்.*

*“தெரியும்” பிரியா சொன்னாள்.*

*“கொஞ்சம் கதிருடா அட்ரஸ் குடுக்க முடியுமா .....?”நிகிலா கேட்டாள்.*

*“எதுக்குடி திடீர்னு கேக்குற?”பிரியா வியப்போடு கூறினாள்.*

*” அவங்க அம்மா ஹாஸ்பிடல் செலவுக்கு பணம் கேட்டு இருந்தாரு” நிகிலா பதிலளித்தாள்.*

*“கதிரோட அம்மா நாலஞ்சு நாளைக்கு முன்னாடி செத்துப் போயிட்டாங்க உனக்கு தெரியாதா....?”பிரியா வருத்தத்தோடு கூறினாள்.*

*நிகிலா தன்னையறியாமல் வேதனைப்பட்டாள்.*

“எனக்கு தெரியாது யாரும் சொல்லல”நிகிலா தன் கண்ணீரை பிரியாவிற்கு தெரியாமல் கட்டுப்படுத்திக்கொண்டு சொன்னாள்.

“பரவால்லை விடுடி”பிரியா கூறினாள்.

“இப்ப கதிரும் அவரோட சிஸ்டரும் எப்படி இருக்காங்க .”நிகிலா ஆதங்கமும் அன்பும் கலந்து கேட்டாள்.

“இல்லடி எனக்கு எதுவும் தெரியல டெத்துல பார்த்ததோடு சரி அதுக்கப்புறம் கதிர நான் பார்க்கவும் இல்ல போனும் பண்ணல .”பிரியா சொன்னாள்.

“ஓகே டி நா போய் கொஞ்சம் விசாரிச்சுட்டு வர அட்ரஸ் கொடு.”நிகிலா கேட்டாள்.

நிகிலா ,பிரியாவிடம் கதிரின் முகவரி பெற்றுக் கொண்டு கிளம்பினாள்.

**அன்று (சபரியின் மனத்திரையில்)**

“த்தா...க் குட்டி எந்திரி”வீரப்ப முதலியின் கர்ஜனையில் செவலி நடுங்கியபடி எழுந்து நின்றாள். வீரவாளொலி நடப்பதையே உற்று கவனித்துக் கொண்டு நின்றிருந்தான்.

“எம்புட்டு தடவ சொல்றது நான் இருக்கேன்.நீ மாட்டேனா?குடியான கூடி உசுரு மட்டும் இல்ல இந்த ஊருலயும் ஒரு உசுரு கூட மிஞ்சாது.”வீரப்ப முதலி ஆவேசத்தோடு கத்த,
செவலி இமைக்க மறந்து அவரையே பார்த்தபடி நின்றாள்.

“என்ன பாக்குறவ” வீரப்ப முதலி மீண்டும் கத்தினார்.

“அதெல்லாம் எனக்கு தெரியாது எஜமா நீங்க குடியான குடிக்கு எந்த ஆபத்தும் இல்லனு உத்தரவாதம் கொடுத்தா நா உங்க திட்டத்துக்கு ஒத்து உழைக்கிற .”செவிலி கண்ணீரை துடைத்துக் கொண்டு உறுதியான குரலில் தீர்க்கமாக அவர் கண்களை பார்த்து சொன்னாள்.

வீரப்ப முதலி, அவளை ஒரு நிமிடம் ஆச்சரியத்தோடு பார்த்தார். அவள் குரலில் இருந்த உறுதி, செவலி, அவர் நினைத்த காரியத்தை கச்சிதமாக ஈடேற்ற கூடிய சரியான ஆள் தான் என்று அவருக்கு உணர்த்தியது.

“எம்புட்டு தடவ சொல்லுவாங்க....குடியான குடிக்கு நான் பொறுப்பு. ” வீரப்ப முதலி கம்பீரமான குரலில் வாக்களித்தார்.

செவலி ,வீரப்ப முதலியை வணங்கி விட்டு, குடியானவர் பகுதியை நோக்கி ஓட்டம் பிடித்தாள்.

“வீரா …… வர வெள்ளிக்கிழம நாள் நல்லா இருக்கு ஏற்பாட்டை வெரச முடி”வீரப்ப முதலில் வாளொலிக்கு உத்தரவிட்டார் .

” ஏற்பாட்டை எங்க வைக்கணும்? ” வாளொலி கேட்டான்.

“என்னல விளகங்கல” வீரப்ப முதலி பதிலளித்தார்.

“பெருமாள் கோவில்லயா? அய்யனார் கோவில்லயா?” வாளொலி கேட்டான்.

வீரப்ப முதலி சற்று யோசித்துவிட்டு
“அய்யனார் கோயில்ல வை, பூசாரி கிட்ட சொல்லிடு, செவலிக்கு அவ வூட்டுக்கு என்ன வேணும்னு பார்த்து செய்,குடியான குடுக்கு தேவையான நெல்லு, கருப்பட்டி ,காய்கறி அம்பூட்டும் பார்த்து அனுப்பிவிடு, கணக்கு பிள்ளை கிட்ட இதல்லா ஏங் கணக்கில எழுதச்சொலு.”வீரப்ப முதலி ,வாளொலிக்கு அனைத்து உத்தரவுகளையும் பிறப்பித்து விட்டு, இரண்டடி உள்நோக்கி எடுத்து வைத்தார்.

“ஜமீன், ராணியம்மா கிட்ட ………..?”என்று வாளொலி இழுத்தான்.

“அத நான் பாத்துக்குறேன், நீ சொன்னத செய் .”வீரப்ப முதலி மிடுக்கோடு கூறிவிட்டு உள்ளே போனார்.

**இன்று**

நிகிலா, பிரியா வீட்டிலிருந்து வெளியே வந்து தன் காரை கிளப்ப ,

“மேடம் நீங்க தானே நிகிலா ….?”என்று தயங்கிய படி தினகர் கேட்டான்.

“ஆமா நீங்க யாரு?”நிகிலா யோசனையோடு கேட்டாள் .

“கதிரோட கிளோஸ் பிரெண்ட் மேடம் .”தினகர் கூறினான்.

“சொல்லுங்க உங்களுக்கு என்ன வேணும்?”நிகிலா கேட்டாள்.

“கதிர் தான் வேணும் மேடம். ” தினகர் கூறினாள்.

“என்ன சொல்றீங்க புரியல?”நிகிலா கூறியபடியே காரிலிருந்து கீழே இறங்கினாள்.

“சாரி மேடம்”என்று தொடங்கி அவனுக்கும் கதிருக்கும் இடையே நடந்த பேச்சுகளை ஒன்றுவிடாமல் விளக்கினான்.

நிகிலா அனைத்தையும் கேட்டுவிட்டு காலை தரையில் ஓங்கி உதைத்து ,

“யூ இடியட்”ஆத்திரத்தோடு சொன்னாள்.

“சாரி மேடம்”தினகர் வருத்தப்பட்டான்.

“அப்புறம் என்ன ஆச்சுன்னு முழுசா சொல்லி தொலைங்க.”நிகிலா கத்தினாள்.

“கதிரோடா அம்மா இறந்த அன்னிக்கு நைட் அவன் என்ன பார்க்க வந்தான்.”என்று தினகர் நிறுத்தினான்.

“அன்னிக்கும் பேசி கதிர நல்லா குழப்பி விட்டு இருப்பீங்க!.” நிகிலா ஆத்திரத்தோடு மீண்டும் கத்தினாள்.

“சாரி மேடம் நீங்க சொன்னது கரெக்ட் தான். என் கிட்ட கொஞ்சம் காசு வாங்கிட்டு நைட்டே இலவந்திகைப் பள்ளிக்கு போறேன்னு சொல்லிட்டு கிளம்பின, அங்க போயிட்டு நல்லபடியா வந்துடுவான்னு நான் பாட்டுக்கு இருந்துட்டேன். எனக்கு தெரிஞ்ச ஒருத்தர் போலீஸ் டிபார்ட்மெண்ட்ல இருக்காரு அவர் தான் சொன்னாரு கதிர கஞ்சா கேஸ்ல அரெஸ்ட் பண்ணிட்டாங்கனு”.தினகர் கூறினான் .

“வாட் நான்சென்ஸ்.கதிர் அப்படில்லா செய்யமாட்டாரு.....”நிகிலா சொன்னாள்.

“ஆமா மேடம் நமக்கு தெரியும்.ஆனா.... போலீசுக்கு சாட்சி தானே முக்கியம்.”தினகர் ஆதங்கத்தோடு சொன்னான்.

“கதிர் இப்போ எங்க இருக்கார். ?”நிகிலா கேட்டாள்.

“புழல்ல இருக்கான் மேடம் .” தினகர் கூறினான்.

“நியூஸ் எப்ப தெரியும்.” நிகிலா கேட்டாள்.

“காலைல தான் மேடம் தெரியும். தங்கச்சி பூங்குழலி ரொம்ப பாவம். தனியா ரொம்ப கஷ்டப் படுற, முகத்தை பார்க்கவே எனக்கு ரொம்ப சங்கடமா இருக்கு. நீங்க தான் மேடம் உங்க அப்பாகிட்ட சொல்லி ஏதாவது உதவி பண்ணனும்.”தினகர் இருகரங்களையும் குவித்து கண்ணீர் உதிர்த்த படியே கேட்டான் .

“சரி ஓகே நீங்க கிளம்புங்க நான் பாத்துக்குறேன்.” நிகிலா கூறினாள்.

நிகிலா தன் தந்தையிடம் அனைத்தையும் கூறிவிட்டு தலையில் கை வைத்தபடி அமர்ந்திருந்தாள் .

“சரிம்மா நீ கவலைப்படாதே நான் ஜாமீனுக்கு ட்ரை பண்றேன்.”ராஜசேகர் கூறினார்.

“அப்பா கதிர் எந்த தப்பும் பண்ணல.”நிகிலா சொன்னாள்.

“அது நமக்கு தெரியும், போலீஸும் சட்டமும் நம்பாது மா.”ராஜசேகர் கூறினார்.

நிகிலா அமைதியாக இருந்தாள் .

“நான் இப்பவும் சொல்றேன் உன் வேலைய மட்டும் பாரு இதெல்லாம் வேண்டாம் .”ஆனந்தி சொன்னாள்

“ஏ……ய் சும்மா இரு. இவ ஒருத்தி .”என்று ராஜசேகர் மனைவியை அடக்கினார்.

“முதல்ல கதிரை போய் பாப்போம் என்ன நடந்துச்சுன்னு விசாரிப்போம். நீ போய் அவன் தங்கச்சிக்கு ஏதாவது ஹெல்ப் வேணும்னா கேளு முடிஞ்சா இங்க கூட்டிட்டு வா.”என்று ராஜசேகர் , மகளிடம் கூறினார் .

நிகிலா தந்தையை ஒரு மாதிரி பார்த்தாள்.

“ஏம்மா என்ன அப்படி பாக்குற என்மேல சந்தேகப்படறியா?”ராஜசேகர் தயங்காமல் கேட்டார்.

“இல்லப்பா இல்ல. ஏதோ மர்மம் இருக்கு. கதிர் பாட்டுக்கு வேலையை பார்த்துட்டு இருந்த வரைக்கும் ஒன்னும் பிரச்சினை இல்லை. நான்தான் அவரை தூண்டிவிட்ட”நிகிலா மனக்குமுறலோடு சொன்னாள் .

“இல்லம்மா இதெல்லாம் நடக்கனமுனு இருக்கு, இது நடக்க நீ ஒரு கருவி அவ்வளவுதான் .”ராஜசேகர் மகளை ஆறுதல் படுத்த முயன்றார்.

“இல்லப்பா இந்த விஷயம் நம்ம மூணு பேருக்கு தான் தெரியும் .கதிர் அவரோட பிரண்டு தினகர் கிட்ட சொல்லி இருக்காரு. எனக்கு தினகரன் மேல கொஞ்சம் டவுட்டா இருக்கு.”நிகிலா கலக்கத்தோடு சொன்னாள்.

“சரிமா நான் தினகர் பற்றி விசாரிக்க சொல்றேன் .”ராஜசேகர் கூறினார்.

“ஓகே நா போய் பூங்குழலிய பாத்துட்டு வரேன் .”நிகிலா தந்தையிடம் விடைபெற்றுக்கொண்டு, பூங்குழலி வீட்டிற்கு வந்தாள்.

கதிரை பற்றி கேள்விப்பட்டு பூங்குழலி முதலில் மிரண்டு போய் அழுதாள். பிறகு சமாதானம் அடைந்து கதிரை பார்க்க வேண்டும் என்று கூறி அடம் பிடித்தாள் .

நிகிலா பூங்குழலியின் பிடிவாதத்தை தந்தையிடம் கூற ,

“ஓகே முதல்ல அந்த பொண்ண அவங்க அண்ண பாக்கட்டும் அப்புறம் விசாரிச்சுபோம்.”என்று ராஜசேகர் கூற,

நிகிலா தந்தையின் செல்வாக்கை பயன்படுத்தி, அனுமதி பெற்று பூங்குழலியை கதிரைப் பார்க்க அழைத்துச் சென்றாள்.

“அண்ணா நீ எப்படி ஜெயிலுக்கு வந்த? என்னால நம்பவே முடியல !என்ன ஆச்சுன்னு சொல்லு?”அழுதபடியே பூங்குழலி அண்ணனிடம் கேட்டாள்.

“இந்த ஊர்ல இருக்காத தயவுசெஞ்சு நிகிலா மேடம் சொல்றபடி கேளு. உன் உயிருக்கு ஆபத்து ப்ளீஸ் போயிடு .”கதிர் நிகிலாவை பார்த்தபடியே பூங்குழலியின் கைகளைப் பற்றி அழுதபடியே சொன்னான்.

அண்ணன் அழுவதைப் பார்த்து குழலியும் அதிகம் அழ, நிகிலா ஒருவாறு இருவரையும் சமாளித்து சமாதானப்படுத்தி பூங்குழலியை அழைத்துவந்தாள்.

“ஓகே அப்பறம் நடந்ததெல்லாம் பூங்குழலி சொல்லிட்டா, நீங்க எதுக்கு உதய் கல்யாணம் பண்ணிங்கனு மட்டும் சொல்லுங்க .” சூரி பாபு நிகிலாவை இடைநிறுத்தி கேட்டான்.

“மிஸ்டர் சூரி பாபு நானும் உதய்யும் லவ் பண்ணி கல்யாணம் பண்ணிகிட்டோம்.அதுமட்டுமில்ல கல்யாணம் என்னோட பர்சனல் .அது எதுக்கு இந்த கேஸ்ல.”நிகிலா சற்று காட்டமாகவே கேட்டாள் .

“கண்டிப்பா நான் இல்லைன்னு சொல்ல, கதிர இந்த ஜமீனோட வாரிசுனு நிரூபிக்க போராடினீங்க ,கதிர் இப்ப ஜெயில்ல இருக்கான். நீங்க,ஜமீனோட சட்டபூர்வமான வாரிசு உதய்ய திடீர்னு கல்யாணம் பண்ணிக்கிட்டா யாருக்க இருந்தாலும் சந்தேகம் வரும் .அதுமட்டுமில்ல உதய் உயிருக்கு ஆபத்து நீங்களே சொல்றீங்க.
சோ நீங்க சரியான விளக்கம் கொடுத்தகனம்.”சூரி பாபு விளக்கினான்.

நிகிலா சற்று நேரம் யோசித்து விட்டு

“கதிர் எப்படி ஜெயிலுக்கு போனாருனு நீங்க கேட்கவே இல்லை? ஆனா என் கல்யாணம் எப்படி நடந்தது? எதுக்கு நடக்குது? மட்டுமல்ல விபரமாக கேக்கறீங்க ?.”ஒழுங்கு காண்பிக்கும் தொனியில் சொன்னாள்.

“ஓகே சாரி மேடம் எல்லாத்தையும் சேர்த்து சொல்லுங்க.கண்டிப்பா கேஸ்க்கு தேவைப்படும் ப்ளீஸ் ” சூரி பாபு கூறினான்.

“பூங்குழலிய அரண்மனையில உதய் கிட்ட சொல்லி அவங்க அம்மாவுக்கு கேர் டேக்கர வேலைக்கு செத்துவிட்ட .அதுக்கப்புறம் சில அடிப்படை தகவல்களை உதய் கிட்ட சொன்ன.”

நிகிலா கூறினாள்.

**உதய் ,நிகிலா உரையாடல்**

“ஓகே நிகிலா நம்ம ரெண்டு பேரும் கதிர நேர்ல போய் பார்க்கலாம்”உதய் நிகிலாவிடம் கூறினான்
.

நிகிலா உதய் இருவரும் சிறையிலிருக்கும் கதிரை சந்தித்தனர்.

” ஹாய் கதிர் உங்கள முத முதல்ல இந்த மாதிரி இடத்தில் பார்க்க ரொம்பவே வருத்தமா இருக்கு .”உதய் சிறையில் இருக்கும் கதிரிடம் கூறினான்.

“சார் நீங்க யாருன்னு எனக்கு தெரியல?”கதிர் அப்பாவியாய் கேட்டான்.

“நான் உங்களுக்கு அண்ணன் ஆகணம்”உதய் கூறினான்.

“அண்ணனா?”கதிர் ஆச்சரியத்துடன் கேட்டான்.

“க....திர்,இவர் சின்ன மாரப்ப முதலி ஜமீனோட அதிகாரப்பூர்வமான வாரிசு உதய் கிருஷ்ணா .”நிகிலா, கதிருக்கு விளக்கினாள்.

கதிர், உதய்யில் கரங்களை பற்றிக்கொண்டு ,

“அண்ணா நான் சத்தியமா கஞ்சாலாம் விக்கலண்ணா என்ன நம்புங்க ப்ளீஸ் .... காப்பாத்துங்க ப்ளீஸ் .” கலங்கிய குரலில் கேட்டான்.
உதய்யும் கதிரை தட்டிக் கொடுத்து ஆறுதல் சொன்னான்.

“ஓகே அன்னிக்கு என்ன நடந்துச்சுன்னு சொல்லுங்க ,இலவந்திகைப் பள்ளிக்கு போனீங்களா? யாரை பார்த்தீங்க? என்ன நடந்துச்சீ? எப்படி ஜெயிலுக்க வந்தீங்க? எல்லாத்தையும் விரிவா சொல்லுங்க.”நிகிலா கேட்டாள்.

“இல்ல மேடம் இலவந்திகைப் பள்ளிக்கு வந்து இறங்கினதும் மூணு நாலு போலீஸ்காரங்க நின்னுட்டுயிருந்தாங்க .
என் பைய சோதனை போட்டு கஞ்சா பொட்டலங்களை எடுத்தாங்க, கஞ்சா கடத்துரியா? இல்ல விக்குரியா? சொல்லி அடிக்க ஆரம்பிச்சுட்டாங்க .போனையும் புடுங்கிட்டாங்க என்னால யாருக்கும் தகவல் சொல்லவும் முடியல .” கதிர் கண்கள் சிவக்க கூறி முடித்தான்.

நிகிலா சூரியிடம் கதிருக்கு நடந்தவற்றை கூறி முடிக்க,

*“ஓகே நா இந்த கேச பத்தி டிபார்ட்மெண்ட்ல விசாரிக்க சொல்றேன் .”சூரி பாபு கூறினான்.*

*”அதுக்கப்புறம் கதிர வெளிய எடுக்க எவ்வளவோ முயற்சி பண்ணோம் எங்களால முடியல ,எனக்கு உதயோட நல்ல குணம் ரொம்ப புடிச்சிருச்சி ப்ரோப்போஸ் பண்ண அவரும் ஓகே சொன்னாரு. நான் எங்க அப்பாகிட்டியும் உதய் அவங்க அம்மாகிட்டயும் சொண்ணோம். எங்கப்பா ஒத்துக்கிட்டாரு உதய்யோட அம்மா ஒத்துக்கல எங்கப்பா எங்களுக்கு ரெஜிஸ்டர் மேரேஜ் பண்ணி வச்சுட்டாரு.*

*நாங்க ரெண்டு பேருமே கொஞ்ச நாள் பெங்களூர்ல ஹேப்பியா இருந்தோம். திடீர்னு உதய் அம்மா போன் பண்ணி எங்கள வர சொன்னாங்க”.நிகிலா கூறி முடித்தாள் .*

*“பிளாஸ்பேக் முடிஞ்சிடுச்சா?”சூரி பாபு கேட்டாள்.*

*“இதுவரைக்கும் நடந்த எல்லாத்தையும் சொல்லிட்டேன்”நிகிலா சொன்னாள்.*

*“ஓகே மேடம் நா போலாமா?”சூரி பாபு சற்று நக்கலாய் கேட்டான்.*

*நிகிலா*

*“ப்ளீஸ்”என்றாள்.*

*சூரி பாபு*

***கதிரை யார் கஞ்சா கேசில் மாட்டிவிட்டிருப்பார்கள்?. நிகிலா கூறும் அனைத்தும் உண்மையா? , நிகிலா ஏதோ அனைவரின் உயிருக்கு ஆபத்து என்றாலே அதற்கும் இதற்கும் என்ன தொடர்பு?. உதய் , சபரியை எதற்கு இங்கு வரவழைத்தான்?.இடையில் வேலன் மற்றும் யாரோ சாமி வேறு?என்ன இது இடியாப்பம் போன்று. என்று எண்ணி குழம்பியவாரே வெளியேறினான்.***

**தொடரும்…**

# 11. மரகத வளரி (11)

***அன்று (சபரியின் மனத்திரையில்)***

*"நீங்க செய்யறது உங்களுக்கே நல்லா இருக்கா?"தன் கண்ணீரில் மனக்குமுறலை கரைத்தவரே சின்ன ராணி அம்மா என்று அழைக்கப்படும் வசந்தாமணி அழும் தன்னுடைய இரண்டு வயது பெண் குழந்தையை தோளில் போட்டு சமாதானப்படுத்திய படியே கேட்டாள்.*

*" வசந்தோ..... நம்ப சனங்களுக்காக தான் புரிஞ்சுக்கோ! "வீரப்ப முதலி அவளை சமாதானப் படுத்தும் விதத்தில் ஒரு கையால் அவள் தோளை தட்டி மறுகையால் குழந்தையின் தலையை வருடினார்.*

*வசந்தாமணி ஆத்திரத்தோடு அவருடைய இரண்டு கைகளையும் அடுத்தடுத்து தட்டி விட்டு இரண்டடி பின்னே நகர்ந்து கொண்டு ,*

*" இப்பிடி நீங்க செய்யறதால மட்டும் அந்தப் இங்கிலீஷ்கார உள்ள வராம இருப்பனா? "வசந்தாமணி ஆவேசமாய் கத்தினாள்.*

*" இல்ல வசந்தோ.... வருவான் தான், ஆனா நம்ம ஜமீனுக்குள்ள வராமல் தடுக்கலாம் யோசிச்சு பாரு ."வீரப்ப முதலி பொறுமையோடு சொன்னார்.*

*"நீங்க நம்ப பிள்ளையைப் பத்தி யோசிச்சீங்களா? என்னப்பத்தி யோசிச்சீங்களா?"வசந்தாமணி கண்ணீரை துடைத்துக்கொண்டு மீண்டும் ஆவேசமாய் கேட்டாள்.*

*" உனக்கு தேவையான ஏற்பாடு அம்பூட்டையும் செஞ்சிட்டேன். "வீரப்ப முதலி கூறினார்.*

*வசந்தாமணி அதிர்ச்சியோடு கணவரைப் பார்த்து,*

*"அப்ப முழுசா திட்டம் போட்டு தான் வந்து என்கிட்ட சொல்றீங்களோ..?"வசந்தாமணி க்ரோதம் கண்களில் மின்ன கேட்டாள்.வீரப்ப முதலில் அமைதி காக்க, வசந்தாமணியே தொடர்ந்தாள்,*

*" நல்லா இருக்க, ரொம்ப நன்றி உங்கள நம்பி கல்யாணம் கட்டணத்துக்கு ரொம்ப நன்றி ." வசந்தாமணி மீண்டும் க்ரோத தோடு கேட்டாள்.*

*"இரு வசந்தோ..... இந்த பெட்டி நிறைய நகைகள் இருக்கு, இதுல என் பேர்ல இருக்கிற நஞ்சை புஞ்சைய உன் பேர்ல எழுதி இருக்கேன் ." வீரப்ப முதலி கூறினார்.*

வசந்தாமணி ,வீரப்ப முதலியை ஆத்திரம் ,குரோதம் வன்மம் கலந்து முறைத்தாள் .

“எனக்கு இது வேண்டாம். எங்க அண்ணன் இருக்கு போதும்” கூறியபடியே இரண்டு டிரங்க் பெட்டியில் தன்னுடைய புடவைகளையும் குழந்தையின் உடமைகளையும் அடைத்து கொண்டு புறப்பட்டாள்.

“இந்தா புடி இது உனக்கில்ல, என்ற மகளுக்கு சீதனம்.” என்று கூறிய படியே வீரப்ப முதலி பத்திரங்களை அவள் கையில் திணித்தார்.

அவள் அதை வாங்காமல் கைகளை பின்னே மறைந்து கொண்டாள் , பெட்டி மீது வைத்துவிட்டு, அறையை விட்டு வெளியே வந்து ,

“வீரா”என்று உரத்த குரலில் கத்தினார்.

வீரவாளொலி எங்கிருந்தோ ஓடி வந்து அவரைப் பணிந்து படி நின்றான்.

“சின்ன ராணி அம்மாவ அவங்க அண்ணன் வூட்டுல பத்திரமா செத்துரு.”என்று உத்தரவிட்டார்.

அவர் அறை பக்கம் திரும்ப வசந்தாமணி குழந்தையுடன் பெட்டியும் கையுமாய் நின்றிருந்தாள். பத்திரமும் நகைபெட்டியும் தரையில் கிடந்தன .

அவற்றை எடுத்து ஒரு பட்டுத்துணியில் சுற்றி வீரவாளொலியிடம் கொடுத்து ,

“இது ராணி அம்மாவோட அண்ணன் வாஞ்சி பிறைசூடன் கிட்ட கொடுத்துடு. இது என்ற மகளுக்கு என்னோட சீதனம்” வீரப்ப முதலி மகளுக்கு சீதனம் என்பதை அழுத்தி சொன்னார்.

வசந்தாமணி, அவர் கண்களைத் குரோதத்துடன் பார்த்தபடியே மெல்ல அவரை கடந்து நடக்க வாளொலி அவளுடைய பெட்டிகளைத் தூக்கிக் கொண்டு அவள் பின்னால் நடந்தான்.

“அம்மா.....ம்மா இப்படி அமைதியா இருக்காதீங்க ,மனசு ரொம்ப வருத்தமா இருக்கு ஏதாச்சு பேசுங்கம்மா?”வீர வாளொலி, வசந்தாமணியிடம் வழிநெடுக கெஞ்சிய படியே வந்தான்.
அவள், அவனை கண்நிமிர்ந்தும் பார்க்காமல் இறுகிய முகத்துடன் இருந்தாள்.

“வணக்கங்க ஐயா சின்ன ஐயா ……”என்று வீரவாளொலி தயங்கியவாறே வாஞ்சி பிறைசூடனிடம் இழுத்தான்.

“ம்…ம்ம”என்ற சின்ன கனைப்பில் வாஞ்சி பிறைசூடன் , வீரவாளொலியை கையமர்த்தி திரும்பி போகும்படி சைகை செய்தார்.

வீரவாளொலியும் வேறுவழியின்றி பதிலேதும் கூறாமல் இலவந்திகைப் பள்ளியை நோக்கி நடந்தான்.

**இலவந்திகைப் பள்ளி**

வெள்ளிக்கிழமை காலை

செவலி நன்றாக அலங்கரித்துக்கொண்டு அய்யனார் கோவிலின் முன்பாக காத்திருந்தாள்.

அய்யனாருக்கு, கோவில் பூசாரி ஏதோ பூஜைகளை நடத்திக்கொண்டிருந்தார் .குடியான மக்கள் அனைவரும் ஒன்றுகூடி பார்த்துக் கொண்டிருந்தனர்.

வீரப்ப முதலி பட்டு வேட்டி சகிதமாய் அய்யனார் கோயிலுக்கு வந்து
செவலின் அருகில் நின்று அய்யனாரை வணங்கினார்.

செவிலி அசௌகரியதோடு நெளிய குடியான மக்கள் அனைவரும் ஒருபுறம் மகிழ்ச்சியும் மறுபுறம் கலக்கமொன்று அய்யனாரையும் வீரப்ப முதலியையும் மாறி பார்த்தபடி இருந்தனர் .

பூசாரி வீரப்ப முதலியை வணங்கிவிட்டு அய்யனார் காலடியில் இருந்து ஒரு மலர் மாலையை கொண்டு வந்து அவரிடம் நீட்டினார்.

வீரப்ப முதலி அதை அய்யனாரை மனதிற்குள் வணங்கியபடியே பெற்றுக்கொண்டார்.

“நான் செவலிய கண்ணால கட்டிக்க போறேன் .”குடியான மக்களைப் பார்த்து உரக்கச் சொன்னார். அவர்கள் அமைதி காக்க,

“என்ன யாருக்காக ஏதாவது ஆட்சேபனை இருக்கா, இருந்தா சொல்லி போடுங்க.”வீரப்ப முதலி பொதுவாக மக்களை பார்த்து கேட்டார்.
மீண்டும் அவர்கள் அமைதி காத்தனர்.

”இந்த கண்ணாலத்துல நிறைய பிரச்சனை வரும் ,பிரச்சினை வந்தா தான். இங்கிலீஷ் காரனுக்கு துணையா படைக்கு போகமுடியாது. இந்த பிரச்சினையை சரி பண்ண நேரம் சரியா போயிடும். நம்ம ஊரு பொண்டு புள்ளைங்க தாலி எல்லாம் தங்கும் .ஊர் நன்மை கருதி தான் , நான் இத செய்யறேன்.

எனக்கு தெரியும்,குடியான குடி சனமெல்லாம் பயத்துல இருக்கீங்கன்னு, ஜமீன் அதா.... எங்க அய்யனால உங்களுக்கு எந்த ஆபத்தும் வராதுனு உத்திரவாதம் சொல்ற .”வீரப்ப முதலி தன்நிலை விளக்கம் கொடுத்து முடித்து மாலையை செவலியின் கழுத்தில் போட்டார் .

அதன்பிறகு மக்கள் அனைவரும் மகிழ்ச்சியோடு ஒருவர் பார்த்துக் கொண்டனர். பூசாரி விரைந்து

திருமண சடங்குகளை முடித்து வைக்க,
வீரப்ப முதலி செவலியின் கழுத்தில் மங்கல நாண் கட்டினார்.

விருந்து உபசாரங்களில் நிறைவடைய,
அவர் செவிலியின் கரம்பற்றி ஊர்வலமாய் அரண்மனையை நோக்கி நடக்க குடியான மக்களும் அவரை பின் தொடர்ந்தனர்.

விஷயம் கேள்விப்பட்டு வீரவஜ்ஜிர பாகு கொதித்துப் போயிருந்தார்.

" கேடு கெட்டவனே நில்லுடா....! " வீரவஜ்ஜிர பாகுவின் கண்களில் அப்படி ஒரு ஆக்ரோஷம், அவ்வளவு குரோதம். அவர் இவ்வளவு கோபப்பட்டு ஊர் மக்கள் யாரும் கண்டதில்லை. ஏன் வீரப்ப முதலி, குமரப்ப முதலி கூட கண்டதில்லை.

" ஐயா ....."என்று வீரப்ப முதலி ஏதோ கூற வாய் எடுக்க,

"மகா லட்சுமி மாதிரி வீட்டுக்கு வந்தவள நிற்கதியா வூட்டுட்டு, இத நாய் தேவையா டா உனக்கு?" வீரவஜ்ஜிர பாகு
கேட்டார்.

"நீங்க நான் சொன்னது காது கொடுத்து கேட்கல அதனால் ,தான் இதெல்லாம்".வீரப்ப முதலி தீர்க்கமான குரலில் தந்தையிடம் கூறினார்.

"என்னடா என்ன.... நீ சொல்லி நான் என்ன கேட்க கெடக்கு?"வீரவஜ்ஜிர பாகு ஆவேசமானார்.

"இங்கிலீஷ் காரனுக்கு ஆதரவா படையை அனுப்ப கூடாதுன்னு சொன்னேன் இல்ல.நீங்க கேக்கல." வீரப்ப முதலியின் குரலில் அவ்வளவு ஆத்திரம் .

"ஆமாங்கய்யா சின்ன ஜமீன் சொல்றது சரிதான்"குமரப்ப முதலி, அண்ணனுக்கு ஆதரவாய் பேச, வீர வச்சிரபாகு ஒரு முறைப்பில் இளைய மகனை அடக்கினார்.

" பொச கெட்ட பயலே ! நமக்கு ஜமீன் அந்தஸ்து கொடுத்ததே புதுக்கோட்டை சமஸ்தானம் தான். சமஸ்தானமே ஆள் விட்டு கேட்கும்போது நான் என்ன பண்ண முடியும். "வீரவஜ்ஜிர பாகு கூறினார்.

"ஜமீன் அந்தஸ்து கொடுத்தா...... அவங்க பொஞ்சாதிய கே.....ட்ட விட்டுக் கொடுப்பீ.......ங்களோ ?"வீரப்ப முதலி உச்சஸ்தாயில் கத்தினார்.

"ஏ.....ய்"என்று கத்தியபடியே வீரவஜ்ஜிர பாகு எகிறி வந்து மகனின் சட்டையை கொத்தாக பிடித்து இழுத்தார்.

“யாரு கிட்ட என்ன பேசுறேன்னு தெரிஞ்சுதான் பேசுறியா? நீ பண்ணது தப்பு ன்னு கேட்க வந்த என்னையே மரியாதை இல்லாம பேசுறியா ?நம்ப பரம்பரை பரம்பரையாக சமஸ்தானத்துக்கு அடங்கிக் கிடக்குறவங்க . அவங்க நெனச்சா ஒரு நிமிஷத்துல நம்ம ஜெமினையே ஒன்னும் இல்லாம ஆக்கிடுவாங்க!”என்று வீரவஜ்ஜிர பாகு கர்ஜித்தார்.

“படைக்கு மட்டும் ஆள் போச்சு இந்த ஊரை ஒண்ணும் இல்லாமப் போயிடும் பொண்டு பிள்ளைகளாக தெருவுல நிற்கும். இங்கிலீஷ் காரனுக்கு ஞாய தர்மம் ஒன்னும் கிடையாதா?அவனே பஞ்சம் பிழைக்க தான் இந்த ஊருக்கு வந்தா, அவ நமக்கு என்ன நாட்டாமை செய்ய வேண்டி கிடக்கு. மண்ணையும் பொன்னையும் உசுரா மதிக்கிற நம்மகிட்ட அவன் எதுக்கு இப்படி முட்டிக்கிட்டு நிற்கிறான். நம்மகிட்ட கையை நீட்டி கப்பம் வாங்கிக் நம்பலயே அதிகாரம் பண்ண என்ன அர்த்தம்?,அதுக்கு உங்க சமஸ்தானம் துண போறாரு அதைக் கேள்வி கேட்கத் துப்பு இல்ல.ஏன் இப்படி முதுகெலும்பில்லாத கிடக்க? .” வீரப்ப முதலி ஆவேசமாக கேட்டார்.

“அதுக்கு நீ இந்த நாயை கட்டிகிட்டு வந்ததுக்கு என்னடா இருக்கு?” வீரவஜ்ஜிர பாகு கேட்டார்.

” என்ன மாமா இப்படி கேட்டுட்டீங்க? ”குமரப்ப முதலியின் மனைவி ரத்னாவதி முன்வந்தாள்.

வீரவச்சிர பாகு என்ன என்று அவளை திரும்பிப் பார்த்து கண்ணசைத்தார் .

” குடியானவள கட்டிக்கிட்டா, ஜமீன்ல குழப்பம் வரும், படைக்கு ஆள் அனுப்ப முடியாது. புதுக்கோட்டை சமஸ்தானம் வருணாசிரமத்தை ரொம்ப மதிக்கிறவரு
இந்த விஷயம் தெரிஞ்சா அவர் கண்டிப்பா நம்ம ஜமீன் தள்ளி வைப்பாரு அதனாலதான் ,சின்ன ஜமீன் திட்டம் போட்டு இப்படி செஞ்சிருக்காரு இதுக்கு வாளொலியும் உடந்தை ”ரத்னாவதி செவலியையும் வீரளொலியையும் மாறி மாறி முறைத்தவாறே கூறி முடித்தாள் .

குமரப்ப முதலி, ரத்னாவதியை உள்ளே போகும்படி சைகை செய்து முறைத்தார் .

இதற்குள் புதுக்கோட்டை சமஸ்தானத்திற்கு செய்தி எட்ட சமஸ்தானத்தில் இருந்து சமஸ்தானத்தின் பிரதான காரியதரிசியான நஞ்சுண்டான் பிள்ளை அரக்கப்பரக்க இலவந்திகைப்பள்ளித் வந்து சேர்ந்தார்.

அவரைக் கண்டதும் அனைவருக்குமே பீதி கிளம்பியது.

வீரவஜ்ஜிர பாகுவை விட, அவர் வயதில் பெரியவர். எனவே, வீர வச்சிரபாகு இடையில் அங்கவஸ்திரத்தை கட்டிக்கொண்டு அவரை வணங்கி வரவேற்றார் .

நஞ்சுண்டன் பிள்ளை அரண்மனைக்கு வெளியில் நின்றபடியே,

“என்ன குடியான குடிக்கு சம்பந்தி ஆயிட்டீங்க போல, கல்யாண விருந்தெல்லாம் முடிஞ்சுதா இனிமேதான!. கொத்து சாவி குடியான மருமவ கைக்கு போயாச்சா?”என்று எகத்தாளமாய் கேட்டார்.

“இல்லங்கய்யா உள்ள வாங்க! சிரமபரிகாரம் பண்ணிக்கிட்டு ஆற அமர பேசுவோம்” என்று வீர வச்சிரபாகு குழைந்தார்.

“இல்ல.... இல்ல சமஸ்தானத்துல சோலி கிடைக்கு. சரி அது ஊ.... குடும்ப விஷயம் நான் வந்ததை சொல்லிட்டு கிளம்புறேன்.சமஸ்தான உன்னோட ஜமீன் அந்தஸ்தை விலக்கி வைக்க முடிவு பண்ணி இருக்கு, அது மட்டும் இல்ல இனி உன்னோட எந்த ஒரு உறவும் இருக்க கூடாதுன்னு சொல்லி இருக்கு.”என்று நஞ்சுண்டான் கூறி விட்டு வந்த குதிரை வண்டியிலேயே ஏற போனார்.

“ஐ.....யா ஐயா...... பிள்ளைவாள் மன்னிக்கணும் மன்னிக்கணும் .....”கெஞ்சிப்படியே வீரவச்சிர பாகு அவர் பின்னால் ஓடினார்.

நஞ்சுண்டான் திரும்பிப் பார்க்காமல் குதிரையில் ஏற,

“பிள்ளைவாள் ஏதாவது பரிகாரம் சொல்லனம், பெரிய மனசு பண்ணி பரிகாரம் சொல்லணும் .......கருணை காட்டனும் .” வீரவஜ்ஜிர பாகு, நஞ்சுண்டான் பிள்ளை காலில் விழாத குறையாய் கெஞ்சினார்.

தன்னுடைய மானம், மரியாதை, கௌரவத்தை விட்டு அவர் இவ்வாறு கெஞ்சுவதை விட தானே ஜமீன் அந்தஸ்தை தூக்கி எறிந்துவிட்டு தலை நிமிர்ந்து நிற்கலாம் என்று செவலிக்கு தோன்றியது.

அவரை கம்பீர அதிகாரங்களுடனும் ஆளுமை தோற்றத்துடனும் பார்த்து பழக்கப்பட்ட குடியான குடிமக்கள் அனைவருக்குமே அந்த காட்சி,மனதிற்குள் ஏளனத்தை தந்தது.

நஞ்சுண்டன் பிள்ளை சற்று நேரம் அமைதியாக இருந்துவிட்டு,

“பரிகாரம் இருக்கு. நீ இவ்வளவு வருஷம் சமஸ்தானத்துக்கு விசுவாசமா இருந்ததற்கு நிச்சயம் பரிகாரம் இருக்கு.”
வீரவஜ்ஜிர பாகுவிடம் அலட்சியமாய் கூறினார்.
” சொல்ல.....ணும் சொ....ல்லணும் எதுவாக இருந்தாலும் தவறாம செய்யற.” என்று வீரவஜ்ஜிர பாகு உடலையும் குரலையும் தாழ்த்திக்கொண்டு கேட்டார்.

“குடியான குடிய கட்டண உன்ற மகனும் குடியான மருமகளும் ஜமீன்ன மட்டுமல்ல ஊர விட்டே போகணும்.”அவர் கூறி முடித்ததுதான் தாமதம் செவலி கணவரின் கையை பற்றிக்கொண்டு, இலவந்திகைப் பள்ளிக்கு அடுத்து இருந்த அடர்ந்த வனப்பகுதியை நோக்கி நடக்க, அவர்களைப்

*பின்தொடர்ந்து குடியான மக்களும் சென்றனர்.*

**இன்று**

*பின் மண்டையில் லேசான வலியுடன் சபரி தலையை கைகளால் வருடியபடியே மெல்ல எழுந்து அமர்ந்தான். அவனுக்கு தான் கண்ட காட்சிகள் அனைத்தும் கனவா? கற்பனையா? அல்லது ஏதோ நடந்து முடிந்த சம்பவங்களின் தொகுப்பா? என்று குழப்பமாக இருந்தது.*

*வேலன் அவனுக்கு கொட்டாங்குச்சியில் குடிக்க தண்ணீர் கொடுத்தான்.அவன் வேலனை உற்றுநோக்க,*

*“இந்தா தண்ணி குடி, சாமி வருவாரு, உன் குழப்பத்துகொல்லாம் விட சொல்லுவாரு”. என்று வேலன் கூறி சென்றான் .*

***சபரி தண்ணீரை பெற்று கொண்டு ,தனக்கும் மனத் திரையில் தான் கண்ட காட்சிகளுக்கும் என்ன சம்பந்தம்?, அதைவிட முக்கியம் தான் அரண்மனையிலிருந்து எப்படி இங்கு வந்தோம் ?இது என்ன இடம்? இவர்கள் யார்? என்று குழம்பிய மனநிலையில் யோசித்தபடியே அப்படியே அமர்ந்திருந்தான் .***

**தொடரும் .....**

# 12. மரகத வளரி (12)

சூரி பாபு தன் மனக் குழப்பங்களை யோசித்தபடியே ஜமீன் அரண்மனையை அடைந்தான்.பூங்குழலி கண்ணில் பட,

" உதய் சாருக்கு எப்படி இருக்கு? "
சூரி பாபு , பூங்குழலியிடம் கேட்டான்.

"எனக்கு தெரிஞ்சு நல்லாத்தான் இருக்காரு".பூங்குழலி கூறினாள்.

"சபரி எங்க?"சூரி கேட்டான்.

"சபரி....யா எங்கிட்ட கேட்டா?,உங்க கூட இருக்காருனு , நான் நினைச்சுட்டு இருக்கேன். நீங்க என்ன கேட்கிறீங்க? ." பூங்குழலி கூறினாள்.
இவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருக்கையிலேயே சபரி வந்து சேர்ந்தான்.

அவன், இவர்களை கண்டுகொள்ளாமல் கடந்து உள்ளே போனான்.

"டேய் சபரி ஒன்ன காணோம் தான் நாங்க ரெண்டு பேரும் பேசிட்டு இருக்கோம் .எங்கடா போன ?" சூரி கத்தினான்.

சூரி பாபுவின் குரல் அவனை உசுப்ப நின்று திரும்பிப் பார்த்தான் .

"வாக்கிங்" சபரி கூறிவிட்டு தன் அறையை அடைந்தான்.

"நிகிலா?"என்று கேள்வியோடு பூங்குழலி இழுக்க
"இப்ப இத பத்தி எதுவும் பேச வேண்டாம் ."சூரி, பூங்குழலியிடம் கட்டளையிடும் தொனியில் கூறினான்.

பூங்குழலி தன் வேலையை பார்க்கபோய்விட்டாள். சூரி பாபு அறையைக்கு வந்து ,

"என்னடா மச்சி .......?" மிருதுவான குரலில் சபரியிடம் கேட்டான்.

கனத்த மௌனத்துக்குப் பிறகு சபரி தனக்கு நிகழ்ந்த அனைத்து அனுபவங்களையும் சூரி பாபுவிடம் விளக்கினான்.

"அப்புறம் நீ மயக்கம் தெளிஞ்சு எழுந்தீரிச்சா..... அந்த சாமியார் என்ன சொன்னாரு சொல்லு?"சூரி ஆர்வத்தோடு கேட்டான்.

" செவலியும் வீரப்ப முதலியும் ஊர விட்டு போயிட்டாங்க ,அதுக்கப்புறம் குடியான குடியில பலர் கொஞ்சம் கொஞ்சமாக காலி பண்ணிட்டு வேற வேற ஊர்களுக்கு போக ஆரம்பிச்சாங்க . "சபரி தன் மனத்திரையில் கண்டவற்றை சூரியிடம் கூறி நிறுத்தினான். சற்று நேரம் மௌனித்தான்.

"அதுக்கப்புறம் சொல்லு? வீரவாளொலி என்ன ஆனாருனு தெரியுமா ....?"சூரி பாபு மீண்டும் ஆவலோடு கேட்டான் .

சபரி தன் மனத்திரையில் கண்ட மிச்ச கதையையும் சூரி பாபுவிடம் சொல்ல தொடங்கினான்.

***அன்று(சபரி மனத்திரையில் கண்டது)***

குமரப்ப முதலியின் மனைவி ரத்னாவதி,
குடியான மக்களையும் வாளொலியையும்
கூலி ஆட்களை கொண்டு கொடுமைப் படுத்தினாள்.

அவர்களுக்கு இரவு, பகலாக வேலை கொடுத்து, உணவு ,ஓய்வு அளிக்காமல் துன்புறுத்தினாள். சாதிய கொடுமைகளை அதிகம் அரங்கேற்றினாள்.

கண்டித்த கணவரை மாமனாரிடம் ஒன்றுக்கு இரண்டாய் மூடிவிட்டாள்.

செவலி, வீரப்ப முதலியோடு ஊரைவிட்டு வெளியேறிய குடியான குடி மக்களை தவிர மீதம் இருந்த மக்கள் அனைவரும் ரத்னாவதியின் கையில் சிக்கி சின்னாபின்னப் பட்டனர்.

பலர் அவள் கொடுமை தாங்காமல் குடும்பம் குடும்பமாய் தற்கொலை செய்து கொண்டனர். ரத்னாவதி வீர வாளொலியை பலவிதங்களில் அவமானப்படுத்தினாள். மாபெரும் வீரனான வாளொலியை ஒருவேளை கஞ்சிக்காக களத்துமேட்டில் அடிமைபோல் வேலை வாங்கினாள்.

ஒருநாள் எதிர்த்து கேட்ட வாளொலியை,

"என்ன திமிர் இருந்தா அந்த குடியான நாய, எனக்கு சரிசமா, ஜமீனுக்குள்ள கொண்டற... அந்த கேடுகெட்ட மனுஷனோட சேர்ந்து திட்டம் போட்டு இருப்ப"என்று ஆவேசமாகக் கேட்டு, களத்துமேட்டில் அடியாட்களை கொண்டு முள் சவுக்கால் அடிக்க வைத்தாள்.
ஜமீன் முழுவதையும் மறைமுகமாய் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தாள்.
புதுக்கோட்டை சமஸ்தானத்திற்கு அதிக விசுவாசம் காட்டினாள்.

புதுக்கோட்டை சமஸ்தானத்தின் உத்தரவுப்படி வாளொலியை பழி சுமத்தி கொல்ல திட்டம் தீட்டினாள். இதை அறிந்து கொண்ட வாளொலி தன் குடும்பத்தினருடன் மதராசுக்கு தப்பிச்சென்றார்.

வீர வாளொலி தப்பி சென்றதும் அவர் புதுக்கோட்டை சமஸ்தானம் சின்ன மாரப்ப முதலி ஜமீனிற்க்கு பரிசளித்த, **மரகத வளரி**யை களவாடி தப்பிவிட்டதாக புதுக்கோட்டை சமஸ்தானதிடம் புகார் அளித்தாள்.

வீரவச்சிர பாகுவின் மரணத்திற்குப் பிறகு
ரத்னாவதி சின்ன மாரப்ப முதலி ஜமீனின் அதிகாரத்தை கைப்பற்றினாள்.
ஆங்கிலேயர்களுக்கு துணை நின்றாள். அவளுடைய ஒரே மகன் கந்தமாரப்ப முதலியை ஆங்கில வழிக் கல்வியில் படிக்க வைத்தாள். கந்த மாரப்ப முதலியை கொண்டு ஆங்கில வழி பள்ளி மற்றும் கல்லூரிகளை நிறுவினாள்.

ரத்னாவதியின் மறைவிற்குப் பிறகு
கந்தப்ப மாரப்பமுதலி அவருடைய மகன் குணசேகரன் , குணசேகரனின் மகன் உதய கிருஷ்ணா வரை களவாடப்பட்ட /மறைக்கப்பட்ட அந்த மரகத வளரியை தேடிக் கொண்டிருக்கின்றனர்.

அந்த வளரியை ரத்னாவதி சொன்னதுபோல், வாளொலி களவாடி சென்றாரா? அல்லது ரத்னாவதியே மறைத்து வைத்து விட்டாளா ? என்பது அனைவருக்குமே கேள்விக்குறியாக உள்ளது. சபரி சூரியிடம் கதையை கூறி முடிக்க ,

“சரி....டா இந்த கதைக்கு உனக்கும் என்ன சம்பந்தம்?”சூரி பாபு கேட்டான்.

“உனக்கு இன்னுமாடா புரியல?” சபரி சொன்னான்.

“சத்தியமா புரியல டா தயவுசெஞ்சு சொல்லுடா!”சூரி கேட்டான்.

“கதிர், பூங்குழலி .....வீரப்ப முதலி-செவலி வம்சாவழியில் வந்த பேரன் ,பேத்தி.
குமரப்ப முதலி-ரத்னாவதி வம்சாவளியில் வந்த பேரன் உதயகிருஷ்ணா. ”சபரி கூறினான்.
சூரி பாபு ஒன்றும் விளங்காமல் சபரியை பார்த்தான்.

“டேய் நீ எல்லாம் ஒரு போலீஸ்காரனா....! இன்னுமாடா உனக்கு புரியல ?” சபரி சற்று நக்கலாய் சூரியிடம் கேட்டான்.

சூரி பாபு குறுக்கும் நெடுக்கும்மாய் தலையசைத்தான்.

“போடா லூசு வீரவாளொயோட வம்சத்தில வந்த பேரன் சபரிநாதன். நான் தான்” சபரி கூறி முடிக்க சூரி ஆச்சரியம், குழப்பம் ,கவலை என்று பல பவங்களை முகத்தில் காட்டினான்.

“உண்மையாவே நீ வீர வாளொலி பரம்பரையில் வந்தவனா?” சூரி வியப்போடு கேட்க ,

அரண்மனைக்கு வந்த அன்று மியூசியத்தில் வளரியை கையிலேந்தும் பொழுது கிடைத்த பரவசத்தை சபரி நினைத்துக்கொண்டான்.

“இருக்கலாம் டா”சபரி சொன்னான்.

“என்னடா பொத்தாம் பொதுவா இருக்கலாம்னு சொல்ற?”சூரி கேட்டான்.

சபரி அமைதி காக்க,

“சரி உங்க பேமிலிக்கு போன் பண்ணி விசாரிச்சு பாரு?”சூரி சொன்னான்.
சபரியும் தன் தாயை அலைபேசியில் அழைத்தான்.

“அம்மா நல்லா இருக்கியா?”சபரி விசாரித்தான்

“…………….”

“தாத்தாவோட அப்பா பெயர் என்ன?”சபரி கேட்டான்.

“…………….”

“ சரிமா தாமரை(தங்கை) கிட்ட சொல்லி வாட்ஸ்ப்ல நம்ப பழைய ஃபேமிலி போட்டோஸ் எல்லாத்தையும் அனுப்ப சொல்லு.”சபரி கூறினான்.

“………….”

“அப்படியே தாத்தாவோட அப்பா பேரையும் கேட்டு அனுப்ப சொல்லு”சபரி சொன்னான்.

“………”

சபரி அலைபேசியை அணைத்து விட்டு, சூரியிடம்

“தாத்தாவோட அப்பா பேரு என்னன்னு அம்மாக்கு தெரியாதாம் கேட்டு சொல்றேன் னு சொன்னாங்க. தங்கச்சி கிட்ட சொல்லி பழைய ஃபேமிலி போட்டோஸ் எல்லாத்தையும் அனுப்ப சொல்லி இருக்கேன்.” என்றான்.

இருவரும் குளித்து முடித்து பூங்குழலி கொடுத்த உணவை உண்டுவிட்டு, உதய்
கிருஷ்ணாவை பார்க்க சென்றனர்.

உதய் கிருஷ்ணாவும் குளித்து முடித்து உணவு அருந்தி தயாராக இருந்தான்.

“சார் எப்படி இருக்கீங்க?”சபரியும் சூரியும் ஒரே குரலில் கேட்டனர்.

“வெரி பைன்”உதய் கூறினான்.

” சார் உங்ககிட்ட சில விஷயங்கள் சொல்ல வேண்டியிருக்கு ……..”சபரி சற்று தயங்கியவாறே பேச ஆரம்பித்தான்.

“ எதுவா இருந்தாலும் சொல்லுங்க, நானும் உங்க கிட்ட நிறைய பேச வேண்டியிருக்கு” உதய் சொன்னான்.

சபரி, உதய் மயங்கி விழுந்ததிலிருந்து தனக்கு ஏற்பட்ட அனைத்து விதமான அனுபவங்களையும் கூறி முடித்தான்.

எல்லாவற்றையும் கேட்டுவிட்டு உதய்

“நீங்க சொல்றது எல்லாமே உண்மைதான்.”என்றான்.

“நானும் சில விஷயங்கள் உங்ககிட்ட பேச வேண்டியிருக்கு!”சூரி தெரிவித்தான்.

“கண்டிப்பா சூரி தாராளமா பேசலாம்.” உதய் கூறினான் .

சூரி பாபு உதய் மயங்கியது முதல் , மருத்துவமனையிலிருந்து உதய் அரண்மனைக்கு திரும்பிய பிறகு நிகிலா தன்னை ஆள் வைத்து கடத்திக்கொண்டு போனது, நிகிலா, கதிர், பூங்குழலி பற்றி கூறிய கதைகள் அனைத்தையும் ஒன்றுவிடாமல் கூறி முடித்தான்.

“நிகிலா சொன்னது உண்ம தா. நா இங்க சபரிய வரவச்சாதே….காணாமல் போனதா சொல்லப்பட்ட அந்த மரகதவரளிய கண்டுபிடிக்கதான்.” உதய் நிகிலாவில் கூற்றுக்களை ஒப்புக்கொண்டான் .

” கதிர கஞ்சா கேஸ்ல யார் மாட்டிவிட்டு இருப்பா? ”சூரி பாபு, உதய்யிடம் தன்னுடைய சந்தேகத்தைக் கேட்டான்.

” நிச்சயமா தெரியல….. சூரி பாபு நீங்கதான் உண்மையை கண்டு பிடிக்கணும் ? ”உதய் , சூரியிடம் வேண்டுகோள் விடுத்தான்.

” கண்டிப்பா உதய் …… எல்லா உண்மைகளும் தெரிஞ்சா யாரோ ஒருத்தர் இருக்காங்க அவங்க தான் எல்லாத்தையும் பண்ணிட்டு இருக்காங்க அவங்க கிட்ட தான் மரகதவளரியும் இருக்கணும். ” சூரி சிந்தனையோடு கூறினான்.

சூரி சொல்ல ,மற்ற இருவரும் அதிர்ச்சிக்கு உள்ளாகினர்.

" அப்படினா ........?"உதய் வார்த்தைகளின்றி தடுமாறினான்.

"என்...ன என்ன ஆச்சு ?" சபரியும் சூரியும் பதட்டத்தோடு கேட்டனர்.உதய் தானே சுதாரித்துக்கொண்டு,

"அப்போ எங்க கொள்ளுப்பாட்டி ரத்னாவதி தாய்வழி உறவுதான் இதுக்கெல்லாம் காரணமா இருக்கும்னு தோணுது?. என்ன எங்க தாத்தா குமரப்ப முதலியோட மறைவுக்கு பின்னாடி, பாட்டி ரத்னாவதி அவங்க அண்ணன் உதவியோடுதான் இந்த ஜமீனை ஆட்சி பண்ணதா, எங்க அம்மா நிறைய முறை சொல்லி இருக்காங்க, அது மட்டும் இல்ல பாட்டி ரத்னாவதி தன்னுடைய மகன் கந்தமாப்ப முதலிக்கு,தன்னுடைய அண்ணன் மகள் மரகதவல்லிய கட்டி வச்சதாகவும் மரகதவல்லி பாட்டியும் தன்னுடைய சொந்த அண்ணன் மகளதான், அதாவது என்னுடைய அம்மா கார்குழல்கோதைய கட்டி வச்சதா சொல்லியிருக்காங்க. " உதய் கூறியது சபரிக்கும், சூரிக்கும் ரத்னாவதியே மரகத வளரியை மறைத்து வைத்திருக்கவும் இப்பொழுது நிகழும் சில மர்மமான நிகழ்வுகளுக்கும் உதய்யின் தாய்வழி உறவுகளே காரணமாக இருக்க வாய்ப்பு இருக்கலாம்னு என்று தோன்றியது.
சபரி நீங்க யாருன்னு உனக்கு தெரியுமா?

உங்களுக்கு இந்த ஜமீனுக்கு என்ன தொடர்பும் தெரியுமா? நா குறிப்பா மரதவரளிய தேட உங்கள ஏ.... வர வெச்சேன்னு தெரியுமா? " உதயகிருஷ்ணா தன் மனநிலையை சீர்படுத்திக் கொண்டு, சபரியிடம் கேட்டான் .

" தெரியும் சார், என்னோட கொள்ளுத் தாத்தா வீரவாளொலி."சபரி சொன்னான்.

"உங்க பரம்பரைக்கே ஏற்பட்ட அவமானத்தை துடைக்க வேண்டிய கடமை உங்களுக்கு இருக்கு இல்லையா ?"உதய் அழுத்தமாய் கூறினான்.

சபரி ஆம் என்பது போல் தலையசைத்தான்.

"இதையெல்லாம் தான் உங்ககிட்ட டிஸ்கஸ் பண்ணனும் னு நினைச்சேன் ஆனா இதெல்லாம் தானாவே உங்களுக்கு தெரிஞ்சிருச்சு."உதய் சொன்னான்

"எல்லாம் ஓகே .....வேலனும் சாமியாரும் யாரு?"சூரி பாபு கேட்டான்.

"எனக்கும் தெரியல ?,நீங்க ரெண்டு பேரும் சொன்னதெல்லாம் வச்சு பார்த்தா அவங்க நம்மளுக்கு உதவத்தான் வந்திருக்காங்கன்னு தோணுது." உதய் கிருஷ்ணா சற்று உற்சாகமான குரலில் சொன்னான்.

உதய் கிருஷ்ணாவின் அலைபேசி அலறல்,அவர்களின் கலந்துரையாடலை கலைத்தது,

“ஹலோ டாக்டர்”உதய் பேசினான்.

“…….”

“ என்ன சொல்றீங்க?,அம்மா எப்படி இருக்காங்க ?”உதய் கேட்டான்.

“………….”

” ஓகே தேங்க்யூ டாக்டர். ”உதய் கூறினான் .

உதய் தன் அலைபேசியை அணைத்து விட்டு, சபரியை ஏறிட,சபரியின் அலைபேசி லேசாய் குலுங்கியது.

“என்னுடைய தங்கச்சி பழைய போட்டோஸ் எல்லாம் அனுப்பி இருக்கா. அது மட்டும் இல்ல, என் தாத்தாவோட அப்பா பேரு வீரவாளொலி.” சபரி கூறியவாறே
அலைபேசியில் வந்திருந்த அவனுடைய குடும்ப புகைப்படங்களை இருவருக்கும் காண்பித்தான்.
சபரியின் தாத்தா வீரபாண்டியின் கருப்பு வெள்ளை புகைப்படம்
அரண்மனையில் மியூசியத்தில் வைக்கப்பட்டிருந்த வீரவொளொலியின் ஓவியத்தை ஒத்திருந்தது.

சூரி, உதய்யிடம்

“போன்ல டாக்டர் தானே? என்ன சொன்னாரு?”என்றான்.

“அம்மாக்கு பேச வரலையாம்?”உதய் சொன்னான்.

“என்ன புரியல” சூரி, சபரி இருவருமே கேட்டனர் .

“குரல்வளை பாதிக்கப்பட்டுருக்குனு சொன்னாரு.”உதய் விளக்கினான்.

“ஏன் திடீர்னு இப்படி?”சபரி தன் சந்தேகத்தைக் கேட்டான் .

“அது தெரியல?”உதய் சொன்னான்.

“அம்மா எப்படி இருக்காங்க?”சூரி கேட்டான்.

“நல்லா இருக்காங்க சாயங்காலம் வீட்டுக்கு அனுப்புறத சொல்லி இருக்காங்க.”உதய் பதிலளித்தான்.

“சரி உதய் நீங்க ரெஸ்ட் எடுங்க, நாங்க ரெண்டு பேரும் கிளம்புறோம்.” சூரி கூறிவிட்டு சபரி உடன் அறைக்குத் திரும்பினான்.

*“என்னடா சூரி சைலண்டா இருக்க?”சபரி கேட்டான்.*

*” நீ வீரவாளொலியோட பேரென்னு உதய்க்கு எப்படி தெரியும்?. ” சூரியின் கேள்வி சபரிக்கு பின் மண்டையில் அடித்ததுபோலிருந்தது .*

*“ஆமா ரொம்ப சரி இத நா யோசிக்கவே இல்லையே? ,எனக்கே இப்பதான் தெரியும். உதய்க்கு எப்படி தெரியும்?” சபரி மின்சார பாய்ச்சலை மனதிற்குள் உணர்ந்த படியே கேட்டான்.*

*“ம்....மம்...... நீ உதய் கிட்ட எச்சரிக்கையாயிரு,அது மட்டும் இல்ல உதய்யோட பாட்டி ரத்னாவதி வீர வாளொலி மேல கொலைவெறியில இருந்திருக்காங்க ,ஆனா வீர வாளொலியோட ஓவியத்தை மியூசியத்தில பத்ரமா வச்சிருக்காங்க. எங்கேயோ இடிக்குது ?*
*நிகிலா சொன்னது எல்லாமே உண்மை. உதய் ......” சூரி பேசுவதை அப்படியே நிறுத்திவிட்டு, உதட்டின் மீது விரல் வைத்து சபரியை பேசாதே என்று எச்சரித்த படியே, ஜன்னலின் திரைச்சீலையை விலக்கி, பார்க்க சுங்குடி புடவையில் முக்காடு போட்டுக்கொண்டு யாரோ அவசரமாய் நகர்வது தெரிந்தது.சூரி சபரி யையும் சாடையில் அழைத்து அதை காண்பித்தான்.*

*“நிகிலா சொன்னது உண்மை, எல்லார் உயிருக்கும் ஏதோ ஒரு ஆபத்து இருக்கு? .” சூரி, சபரியிடம் ரகசியமாய் கூறிவிட்டு, கண்கள் மூடி படுக்கையில் சரிந்து ஏதோ தீவிரமாக சிந்திக்க தொடங்கினான்.*

**தொடரும்...**

## 13. மரகத வளரி (13)

சூரியின் மௌனம் சபரிக்கு என்னவோ சங்கடமாய் தோன்ற ,

" என்ன டா....? " என்று பரிதாபமான குரலில் சூரியின் தோளில் கை வைத்து கேட்டான்.

" ஒன்னும் இல்லைடா ....! உதய் பத்தி யோசிச்சிட்டு இருக்க ". சூரி கூறினான்.

"யாரோ நம்மல கண்காணிச்சிகிட்டே இருக்காங்க. இங்க என்னென்னமோ நடக்குது! ஆளாளுக்கு ஒரு கதை சொல்றாங்க. யாரை நம்புறது யாரை நம்பக் கூடாதுன்னு ஒண்ணுமே புரியல.
பணத்துக்கு ஆசைப்பட்டு இங்க வந்து மாட்டிக்கிட்டமேனு தோணுது." சபரி வருத்தத்தோடு சொன்னான்.

" பீல் பண்ணாத, நா இருக்கேன்ல, என்ன நம்பு! ". சூரி ஆறுதல் கூறினான்.

" என்னோட படிப்புக்கும் தங்கச்சியோட படிப்புக்கும் வாங்குன கடன் அப்பவால தனியா சமாளிக்க முடியலை ,
உதய் நல்ல சேலரி தரன், தங்க இட தானு சொன்னால்தான் வந்த"சபரி தன்னுடைய குடும்ப கஷ்டத்தை எண்ணி வருந்தினான்.

" மியூசியத்தோட சாவி உன்கிட்டதான இருக்கு வா... மியூசியத்த சுத்தி பார்த்துட்டு வருவோம் ."சூரி, சபரியை அழைத்தான்.

"என்னடா திடீர்னு"சபரி கேட்டான்.

"சும்மா...!" சூரி சொன்னான்.

இருவரும் மியூசியத்திற்கு சென்று சுற்றி பார்த்தனர். சூரி கண்களால் வளரிகளை ஆராய்ந்து கொண்டிருந்தான். மியூசியத்தில் வைக்கப்பட்டிருந்த அனைத்து வளரிகளுமே சாதாரண உலோகத்தால் செய்யப்பட்டது.

"இது என்னடா புதுசா இருக்கு?"சூரி, சபரியிடம் வளரியை காண்பித்து கேட்டான் .
"டேய் இதுதான் வளரி. நம்மளோட பாரம்பரியமிக்க போர்க்கருவி." சபரி
பெருமிதத்தோடு பதில் கூறினான்.

"மரகத வளரி அப்படினு உதய் ஏதோ சொன்னாரு என்னன்னு தெரியுமா?" சூரி கேட்டான்.

" வளரிய பத்தி தெரியும் ,ஆனா மரகத வர.....ளி தெரியாது."சபரி தன் அறியாமையை வெளிப்படுத்தினான்.

"ஒ..... வளரிய பத்தி தெரியுமா?" சூரி சற்று வியப்போடு கேட்டான்.

" என்னடா என்ன பார்த்து சாதாரணமா வளரிய பத்தி தெரியுமானு கேக்குற ......தொல்லியல் ஆராய்ச்சி துறையில் பட்டம் வாங்கினவ நா.சபரி பெருமை அடித்துக்கொண்டான்.

"போதும்....டா உன்னோட பிரதாபம் கேட்டதுக்கு பதில் சொல்லு?" சூரி சொன்னான்.

"வளரி நம்ம தமிழ்நாட்டோட பாரம்பரியமான ஒரு போர்க் கருவி, இது ஆதிகாலத்துல வேட்டையாடவும் திருடர்களை பிடிக்கவும் பயன்பட்டது.

அதுக்கப்புறம் அத ஒரு போர் கருவியா பயன்படுத்தினாங்க. வளரிய எரிய ஒரு விதிமுறை உண்டு, வளரிய நல்ல கையால சுழடிகிட்டே வேகமா ஏறியனம், வளரி இலக்கை அடைந்ததும் நம்ம கைக்கே திரும்பி வந்துடும். சில சமயம் இது எரித்தவனேயே தக்க கூடிய அளவுக்கு சக்திவாய்ந்த ஆயுதம் .

ஆரம்ப காலத்துல இத மரத்தாலும் அப்புறம், உலோகங்களையும் செய்ய ஆரம்பிச்சாங்க.
இத புதுக்கோட்டை, ராமநாதபுரம் மாவட்டங்கள அதிகமா பயன்படுத்தினாங்க, மருது சகோதரர்கள் கூட வளரி வீச்சில மாவீரர்கள்னு கேள்விப்பட்டிருக்க." சபரி தன்னை அறியாத உற்சாகத்தோடு கூறி முடித்தான்.

"அப்...பா இவளோ விஷயம் இருக்கா!"சூரி மலைபோடு சொன்னான்.

" ஆனா அது என்னமோ மரகத வளரினு சொன்னாரு ......அதுதான் என்னன்னு புரியல.? " சபரி சந்தேகத்தோடு இழுத்தபடியே சொன்னான்.

"அதுக்கு நான் பதில் சொல்லலாமா?"
நிகிலா மியூசியத்தின் வாசலில் நின்றபடி கேட்டாள்.

" ப்ளீஸ் மேம் சொல்லுங்க "என்றான் சபரி.

" ம்....ம்ம அதுக்கு முன்னா மரகதம்ன என்னென்ன தெரியுமா? " நிகிலா கேட்டாள்.

" அது நவரத்தினங்களில் ஒன்னு. ரொம்ப காஸ்ட்லி "சூரி சொன்னான்.

"அதையும் தாண்டி மரகதத்துக்கு நிறைய குணங்கள் இருக்கு .

இது, வெளிர் பச்சை மற்றும் அடர்பச்சை நிறத்தில் இருக்கும்.

இந்த கல்ல அணிவதால நல்ல மனோபலமும், எதையும் திட்டமிட்டு செய்யும் ஆற்றலும் கிடைக்கும். கற்பனை வளத்தை பெருக்கக்கூடிய சக்தி உடையது. ஞாபக சக்தியை அதிகரிக்க செய்யும். கல்வியில் சிறந்து விளங்கலாம். செய்வினை பாதிப்புகள் இருக்காது.

மரகத கல் வயிற்று கடுப்பை போக்கும். பெண்களுக்கு சுகப்பிரசம் ஆக உதவும். இருதய கோளாறு, ரத்த கொதிப்பு, புற்றுநோய், தலைவலி, நுரையீரல் சம்பந்த பட்ட நோய்களை குணப்படுத்தும்.

மரகதம் அம்பளோட அம்சம பார்க்கப் பட்டுவருது , உலகத்தையே கட்டி ஆளக்கூடிய திறமையும் சாமர்த்தியமும் கூட தரும்னு நம்ப முன்னோர்களான நம்பப்பட்டது.

மனிதர்கள் போலவே இதுக்கும் ஒரு குறைபாடு உண்டு. மேடு பள்ளம் , துவாரங்கள்,கரும்புள்ளிகள், விரிசல்,கொண்ட மரகத கற்கள் ஒளியற்ற மற்றும் குறைபாடு உள்ள கற்கள கருதப்படும். முதல்ல சொன்ன விஷயங்கள் மக்களால் நம்பப்படரவதாலயே அந்தக் கல்லுக்கு தட்டுப்பாடும் மதிப்பும் அதிகம்.

மரகதம் கனிப்பொருள் வகையைச் சேர்ந்த படிகக்கல். சாதாரண தாதுப்பொருட்களான அலுமினியம், சிலிகானோட அரிய தாதுப்பொருளான பெரிலியமும் இணஞ்சி உருவாகரது மரகதம். சிறிதளவு குரோமியம் அல்லது வானெடியம் போன்ற நுண்தனிமங்கள் சேர்ந்து மரகதத்திற்கு மனதைக் கொள்ளை கொள்ளும் அசத்தலான பச்சை நிறத்த தருது. பெரிய பணக்காரர்கள் மரகத கற்களை சேகரிச்சு நகைகல அல்லது கற்கல வச்சிக்கிறது ஒரு பெரிய கௌரவம்னு நினைக்கிறாங்க.

பொதுவா நவரத்தினங்கள விலை உயர்ந்த பார்க்கப்பட்டரது ,மாணிக்கம் அதுக்கப்புறம் மரகதம். ஒரு சென்டிமீட்டர் அளவுள்ள மரகதத்தோட விலை என்னனு தெரியுமா ? ”நிகிலா கேள்வியோடு இருவரையும் பார்த்தாள்.

இருவரும் தெரியாது எனறு தலை அசைக்க ,
ஜமீனுக்கே உரித்தான ஏளனப் புன்னகையோடு தொடர்ந்தாள் .

” ஒரு சென்டிமீட்டர் மரகதத்தோட வில பத்துல இருந்து பதினஞ்சி லட்சம் டாலர் .” நிகிலா கூற, நண்பர்கள் இருவரும் வாயடைத்துப் போய் நின்றனர்.

“அந்த காலத்தல புதுக்கோட்டை சமஸ்தானத்தை ஆண்டவங்க. இந்த ஜமீன உருவாக்குன வீர மறவனுக்கு, மரகதத்துல ஒரு வளரி செஞ்சு, வீரத்தையும் விசுவாசத்தையும் பாராட்டி பரிசாக

கொடுத்தாங்க அதுதான் இப்ப தேடிட்டுஇருக்கிற வளரி..... மரகத வளரி ." நிகிலா மரகதத்தைப் பற்றியும் வளரியை பற்றியும் தன்னுடைய புருஷன் வீட்டு பெருமைகளைப் பற்றியும் நீளமாய் பாடம் நடத்தி முடித்தாள்.

"நீங்க சொல்றத பார்த்தா மரகதத்துகாக தான் அந்த வளரி திருடப்பட்டு இருக்கும்."சூரி சொன்னான்.

" அதுமட்டும் காரணமா இருக்காது, அந்த மரகத வளரி யார் கையில் இருக்கோ அவங்கதான் ஜமீனோட ராஜா அல்லது ராணி. " நிகிலா சொன்னாள்.

"ஏன் மேடம் அப்படி!"சபரி அப்பாவியாய் கேட்டான்.

" அது இந்த ஜமீன் ஓட அதிகார சின்னம்." நிகிலா சொன்னாள்.

மூவரும் மியூசியத்தில் இருந்து வெளியேறி அவரவர் வேலையை கவனிக்க சென்றனர்.
மாலை ஐந்து மணிக்குப் பிறகு

" வா சும்மா வாக் போயிட்டு வருவோம்." சபரி, சூரியை அழைத்தான்.

இருவரும் அரண்மனையை விட்டு வெளியேறும் வரை எதுவும் பேசிக் கொள்ளவில்லை. குறிப்பிட்ட தொலைவு நடந்த பிறகு,

" டேய் மச்சான் அந்த மரகதவளரிய மட்டும் எங்க தாத்தா திருடி இருந்தாருன ஏழு தலைமுறைக்கு உட்கார்ந்து சாப்பிட்டு இருப்போம். " சபரி நிராசையும் ஆற்றாமையும் சூரியிடம் கூறினான்.

சூரி அமைதியாக நடக்க,

" எங்கடா சைலண்டா வர? " சபரி கேட்டான்.

" ஒன்னும் இல்லடா கதிரை யாரு கஞ்சா கேஸ்ல மாட்டிவிட்டு பாங்கனு யோசிச்சிட்டு இருக்கேன்."சூரி சொன்னான்.

" எனக்கு என்னமோ கதிரோட ஃப்ரெண்ட் தினகர விசாரிக்கிற மாதிரி விசாரிச்சா உண்மை தெரியுது தோணுது. " சபரி கூறினார்.

"உதய்க்கு மாமா பொண்ணு இருக்காங்களா?" சூரி கேட்டான்.

" அது எப்படி எனக்கு தெரியும்? "சபரி சொன்னான்.

*“அது இருக்கட்டும், உனக்கு எப்படி உதய் கிருஷ்ணாவ தெரியும்?” சூரி கேட்டான்.*

*” பாண்டியன் சார் மூலமா தான் ” சபரி சொன்னான்.*

*“அது யாரு பாண்டியன் சார்?”சூரி கேட்டான்.*

*“அவர் என்னோட பிரசெர்ஸ், அவர் பழைய போர்க்கருவிகள் பத்தி நிறைய ஆய்வுகள் கட்டுரைகள் எழுதி இருக்காரு. நவரத்தினங்கள் பற்றி கூட ஏதோ ஆய்வு பண்ணிட்டு இருக்காராம் ஒரு தடவ பேசும்போது சொன்னார்.”சபரி விளக்கினான்.*

*” ஓகே அவர எப்படி உதயகிருஷ்ணாக்கு தெரியும்? ” சூரி மீண்டும் கேள்வி கேட்டான்.*

*” என்ன....டா கேள்வி மேல கேள்வி கேட்டிருக்க? ” சபரி சலித்து கொண்டான்.*

*” ரொம்ப சலிச்சிகாத ,பதில் சொல்லு. ” சூரி கூறினான்.*

*” அவருக்கு எப்படி உதய்ய தெரியும் எனக்கு தெரியாதுடா ? இங்க வரதுக்கு முன்னாடி அவர்கிட்டதான் அசிஸ்டன்ட்டா வொர்க் பண்ணிட்டு இருந்தேன். அவர்தான் ஒரு ஜாப் இருக்குன்னு சொல்லி உதய்யோட நம்பர் குடுத்து பேச சொன்னார், நானும் பேசினேன். உதய் நல்ல சம்பளம் தரனு சொன்னதாலதான் இங்க வேலைக்கு வந்த. ” சபரி சொன்னான்.*

*“என்ன வேலைனு சொல்லி இங்க வர வச்சாங்க?”சூரி கேட்டான்.*

*“மியூசியத்த நல்லபடியா பார்த்துக்க சொல்லி தா” சபரி சொன்னான்.*

*சூரி, சபரியிடம் ஆராய்ச்சியாளர் பாண்டியனின் அலைபேசி எண்களை பெற்றுக்கொண்டான்.*

*இருவரும் அந்த அடர்ந்து பறந்த ஆலமரத்தின் வழியாக அரண்மனைக்கு நடந்து கொண்டிருந்தனர்.சற்றென்று இரு கரங்கள் இருவரையும் பிடித்து ஆலமரத்திற்கு இழுத்தது.*

*பிடித்து இழுத்த வேகத்தில் இருவரும் ஆலமரத்துக்குள் விழுந்து உருண்டு புரண்டு எழுந்து நின்றனர். அங்கு நிலவிய அமைதி மற்றும் இருள் நண்பர்கள் இருவருக்கும் மிரட்சியை தந்தது.*

**தொடரும்** .....

## 14. மரகத வளரி (14)

ராணி அம்மா என்று அழைக்கப்படும் கார்குழல் கோதை, உதய் ,நிகிலா, பூங்குழலி, சபரி அனைவரும் அரண்மனையின் பிரம்மாண்டமான அந்த வரவேற்பறையில் கூட , சூரி பாபு மட்டும் குறுக்கும் நெடுக்குமாய் நடந்து கொண்டிருந்தான்.

" சூரி எல்லாரையும் வர சொல்லிட்டு ,நீங்க பாட்டுக்கு அமைதிய இருக்கீங்க? .என்ன விஷயம் சொல்லுங்க ." உதய் கேட்டான்.

"ஆமா நீங்க வாக் பண்றத பார்க்கத்தான் எங்க எல்லாரையும் வரச்சொன்னீங்களா? " பூங்குழலியும் தன் பங்கிற்கு லேசாய் நக்கல் அடித்தாள்.

" சில பேர் ஆடின ஆடுபுலி ஆட்டத்தை காட்டத்தான் உங்க எல்லாரையும் இங்கே வர வச்ச ." சூரி பாபு கூறினான்.

" வாட், நீங்க யார மீன் பண்றீங்க சூரி? " உதய் பதட்டமும் பரிதாபமாய் கேட்ட படி தன் தாயை திரும்பிப்பார்த்தான் .

" தப்பு பண்றீங்க உதய்?" சூரி கூற,

**தப்பா** ' என்று கூடியிருந்த அனைவரும் ஒரே சமயத்தில் முணுமுணுக்க, சூரி அனைவருக்கும் நடுநாயகமாக நின்று கொண்டு,

"உதய் மட்டும் இல்ல ஆரம்பத்துல நானும் தப்பா தான் நினைச்சேன்." என்றான் .

அதற்குள் வாசலில் யாரோ வண்டியில் வந்து இறங்க, அனைவரும் ஆர்வமாய் வாசலை நோக்கினர்.

போலீஸ் புடைசூழ, நிகிலாவின் தாய் ஆனந்தி வந்துகொண்டிருந்தாள் .

" ஏய்.... எங்கம்மா? " நிகிலா பலத்த அதிர்ச்சியை வெளிப்படுத்தியபடி , சூரிய பாபுவை முறைத்துவிட்டு, தாய் நோக்கி ஓடினாள் .

" மேடம் .....ரிலாக்ஸ் ப்ளீஸ், என்ன நடந்துச்சு? எதுக்கு எல்லாரயும் வர வெச்சேன்னு கேட்டீங்க இல்ல ,உங்கம்மா விளக்கமா சொல்லுவாங்க." சூரி போலீசுக்கே உண்டான மிடுக்கும் இளக்காரமும் கலந்து சொன்னான்.

" என்ன சொல்றீங்க? " உதய்யும் தன் பங்கிற்கு அதிர்ச்சியை வெளிப்படுத்தினான்.

பூங்குழலியும் சபரியும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். ஆனந்தியின் பின்னால், வேலைக்காரக் கிழவி பொன்னியும் நின்றிருந்தாள்.

ராணியம்மா என்கிற கார் குழல் கோதை, அவர்கள் இருவரையும் ஒரு முறை ஏறிட்டு மௌனமாய் தலை குனிந்து கொண்டாள்.

ஆனந்தி, அந்த பிரம்மாண்டமான ஹாலில் தலைகுனிந்தபடி அமைதியாய் நின்றிருந்தாள்.

" வயசுக்கும் உங்க ஹஸ்பண்ட் வேலைக்கு மரியாதை கொடுத்து, கௌரவம நடத்திட்டு இருக்கேன். " சூரி அடிக்குரலில் ஆனந்தியை மிரட்டினான்.

ஆனந்தி ,சூரியை குரோத்தோடு முறைத்துவிட்டு, வேறு வழி இல்லை என்பதால் பேச தொடங்கினாள்.

" நிகிலா என்னோட பொண்ணுனு உங்க எல்லாருக்கும் தெரியும். நான் யாருனு யாருக்கும் தெரியாது இல்ல? " என்று கேட்டு நிறுத்தினாள்.

( வீரப்ப முதலி, குமரப்ப முதலி இருவரும் அண்ணன் தம்பிகள்.

வீரப்ப முதலி - வசந்தாமணியின் மகள் ஆனந்தவல்லி. குமரப்ப முதலி-ரத்னாவதி யின் மகன் கந்தமாரப்ப முதலி.

**ஆனந்த வல்லியும் குமரப்ப முதலியும் அக்கா தம்பி**.அதேபோல் வீரப்ப முதலிக்கும் செவலிக்கும் பிறந்த **வேலப்ப முதலி**யும் வீரப்ப முதலியின் **முதல் மனைவி வசந்தா மணிக்கு பிறந்த ஆனந்தவல்லியும் அக்கா தம்பி**. )

ராணி அம்மாவை தவிர அனைவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

" நான் தான் இந்த ஜமீனோட உண்மையான வாரிசு ." ஆனந்தி ஆத்திரத்துடன் அழுத்தம் திருத்தமாகக் கூறினாள்.

அதிர்ச்சி மேல் அதிர்ச்சி என்பதை அனைவர் முகங்களும் பிரதிபலிக்க அவர்கள் ஆனந்தியை உற்று நோக்கினார்.

**அன்று (ஆனந்தியின் வாக்குமூலம்** )

வீரப்ப முதலியின் முதல் மனைவி வசந்தாமணி , தன் அண்ணன் வாஞ்சி பிறைசூடன் முன்பாக

கண்ணீர் பெருக்கோடு அமர்ந்திருந்தாள்.

" அழுவாத கண்ணு " வசந்தாமணியை எடுத்து வளர்த்த தாதி கிழவி பச்சையம்மாள் வசந்தாமணிக்கு ஆறுதல் கூறும் விதமாய் கண்ணீரை துடைத்து தலையை வருடிவிட்டப்படியே

" தாய் இல்லாத புள்ள பார்த்து பார்த்து வளர்த்த, கலங்கி போய்க் கிடக்கே " கிழவி தன் ஆற்றாமையை புலம்பித் தீர்த்தாள்.

" வசந்தா இப்ப என்ன செய்ய நினைக்கிற? " வாஞ்சி பிறைசூடன்
கேட்டான்.

" அந்த ஆளும் அந்த சிறீக்கியும் சந்தோஷமா இருக்க கூடாது . அவளுக்குப் பிறக்கப் பிள்ள தா அந்த ஜமீனோட வாரிசா? "
வசந்தாமணி நின்று நிதானித்து அழுத்தம் திருத்தமாய் கேட்டாள்.

" சத்தியமா இல்ல..... நம்ம குழந்த ஆனந்தவல்லி தான் வாரிசு ." வசந்தா மணியை கிழவி உசுப்பிவிட்டாள்.

அண்ணாணும் தங்கையும் பேசிக்கொண்டிருக்கும் பொழுதே வேலைக்காரன் மூலம்

வீரப்ப முதலி- செவிலியை திருமணம் செய்துகொண்டு,இலவந்திகைப் பள்ளியில் கலவரங்கள் அரங்கேறி, வீரப்ப முதலியும் செவலியும் இலவந்திகைப் பள்ளி விட்டு வெளியேறியிருந்தனர்.என்ற விவரம் அவர்களுக்கு தெரியவந்தது .

பிறைசூடன் அவர்களை ஆள் வைத்து தேடினான்.பெரிதாக எந்த தகவலும் கிடைக்கவில்லை.

வசந்தா மணிக்கு தான் தோற்று விட்டோமோ ? என்ற எண்ணம் தலைதூக்க,வெறிகொண்டு ஆடினாள்.

அண்ணனையும் கிழவி பச்சையம்மாளையும் வார்த்தைகளிலேயே கடித்துக் குதறினாள்.

" நானும் அந்த குடியான கழுதையும் ஒன்னு ." என்று தினம் தினம் கத்தி, கையில் கிடைத்ததை எல்லாம் தூக்கி வீசி அடித்து ,அழுது புலம்பினாள்.

தங்கையின் நிலையை காண சகிக்காத பிறைசூடன்,ரத்னாவதியின் அண்ணனும் உறவுமுறையில் பங்காளியுமான பாரி வேந்தனை சந்தித்தான்.

பாரி ,பிறைசூடனை வரவேற்று உபசரித்தான்.
பிறைசூடன் ,பாரியிடம் நடந்தவற்றை விளக்க,

“ரத்னா சொல்லுச்சு. நடந்த எல்லாம் கேள்விப்பட்டு ரொம்ப சங்கடமா போச்சு” பாரி, வசந்தாமணியை எண்ணி பரிதாப்பட்டான்.

வீரப்ப முதலி, செவலி, வாளொலி மூவரையும் பிறைசூடன் பழிதீர்க்க எண்ணினான்.

” பாரி உன் தங்கச்சிக்கு நானும் நீயும் உதவி செய்வோம். அவள ஜமீனோட பொறுப்ப வலுக்கட்டாயமா எடுத்துக்க சொல்லு .” பிறைசூடன் வன்மம் நிறைந்த குரலில் பாரியிடம் கூறினான் .

பாரிக்கும் இலவந்திகைப் பள்ளியின் செல்வத்தின் மீதும், புதுக்கோட்டை சமஸ்தானத்திடம் நெருக்கம் காட்டவும் எண்ணங்கள் இருக்க, பாரியும் பிறைசூடனுக்கு ஒத்துழைக்க சம்மதித்தான்.

ரத்னாவதி முதலில் கணவனுக்கு பயந்தாள். ஆட்சி, அதிகாரம், பணம் , அதுபோக வசந்தா மணிக்கு நிகழ்ந்தது போல் தனக்கும் நிகழ்ந்து விட்டால் என்ற பயம் .....அவளை ஆட்டுவிக்க, மெல்ல அண்ணன் பக்கம் சாய்ந்தாள்.

இலவந்திகைப் பள்ளியில் மெல்லமெல்ல ரத்னாவதியின் மூலம் பிறைசூடன் ஆளா, காலப்போக்கில் பிறைசூடனை வசந்தாமணி தன் பாசத்தாலும் கண்ணீராலும் கட்டுபடுத்தினாள்.

ஒருநாள் பிறைசூடன், ரத்னாவதியின் மூலம் வீரவாளொலியை கொலை செய்ய திட்டமிட்டான்.

வீர வாளொலியின் மனைவி சங்கு , கிழவி பச்சையம்மாளுக்கு தாய்வழி உறவு. அதுவுமில்லாமல் சங்கு நிரைமாத கர்ப்பிணி. அவர்களின் கொலை திட்டத்தை பச்சையம்மாள் இரகசியமாய் சங்கிற்கு தெரிவிக்க, சங்கு,வீரவாளொலியிடம் மன்றாடி , இருவருமாய் ஊரை விட்டுத் தப்பிச் சென்றனர்.

ஆனந்தி அப்படியே கதையை நிறுத்த அங்கு குழுமியிருந்த அனைவருமே பயம் கலந்த குழப்பத்துடன் அவளையே உற்று நோக்குகின்றனர்.

**இன்று**

” அம்மா அதான் எல்லாம் முடிஞ்சு போச்சே இப்ப அதுக்கு என்ன? நீ எதுக்கு இந்த கதை எல்லாம் இப்ப சொல்லற? ” நிகிலா தாயின் அருகில் சென்று அவள் தோளை பற்றியபடி கேட்டாள்.

” மேடம் முடிஞ்சு போச்சு நீங்க நினைச்சா? அது முடிஞ்சு போச்சா? ” சூரி கோபத்துடன் கேட்டான்.

ஆனந்தி ,சூரியை முறைத்தபடியே கதையை தொடர்ந்தாள்.

***அன்று (ஆனந்தியின் வாக்குமூலம்)***

வீர வாளொலியும் சங்கும் தப்பி சென்றதை அறிந்த வசந்தாமணி , ஆட்களைக் கொண்டு இருவரையும் தேடினாள். வசந்தா மணியின் துரதிருஷ்டம் இருவரும் சிக்கவில்லை.

வசந்தாமணி ஏற்கனவே அண்ணன் வீட்டிற்கு வரும்பொழுது திருடிகொண்டு வந்த மரகத வளரியை வீரவாளொலி தான் திருடிவிட்டான் என்று ரத்னா தவறுதலாய் எண்ணிக்கொண்டாள் . வசந்தாமணி, ரத்னாவதி தவறுதலாக எண்ணிக் கொண்டதையும் தனக்கு சாதகமாக பயன்படுத்திக் கொண்டாள்.

ரத்னாயை தனியே சந்தித்து, வீர வாளொலியின் மீது வன்மத்தை அதிகரித்து செய்தாள் .

வசந்தாமணியின் ஆத்திரம் பன்மடங்காகப் பெருகி வீரப்ப முதலி மற்றும் செவலியை வெறி கொண்டு தேடினாள்.ஆனால் அவள் தேடிய யாருமே அவளுக்கு கிடைக்கவில்லை.

என்னதான் மனிதன் காம, குரோத, லோபங்களில் மயங்கி கிடந்தாலும் காலதேவன் எந்த மயக்கமும் கொள்ளாமல் தன் பணியை தொடர்கிறான்

வசந்தாமணி தனக்குப் பிறகு ஜமீனை ஆட்டுவிக்கும் குரோத, வன்மங்களை மகளுக்கு விதைத்தே வளர்த்திருந்தாள் . வசந்தாமணி தன்மகள் ஆனந்தவல்லியை அண்ணன் மகனுக்கே மணம் முடித்தாள் . வசந்தாமணியும் காலமாக அவளை அடுத்து ரத்னா வதியும் காலமானாள். ஆனந்தவல்லியின் மகள் வசந்தி.

வசந்தியின் மகள் ஆனந்தி.

வசந்தாமணியும் பிறைசூடனும் விதைத்த விஷ விதை தலைமுறை தலைமுறையாக தொடர்ந்து ஆனந்தியை அடைகிறது.

ஆனந்தி கிட்டத்திட்ட உருவத்திலும் குணத்திலும் வசந்தாமணியை போலவே இருக்கிறாள். படித்து பட்டம் பெற்று இருந்தாலும் காதலித்து திருமணம் புரிந்திருந்தாலும் நவநாகரிகமாக நடந்து கொண்டாலும் குடும்ப வன்மம் அவளுக்குள் அப்படியே தேங்கிக் கிடந்தது . கதிர், நிகிலாவிற்கு அறிமுகமானதுமே ஆனந்திக்கு பொறி தட்டியது. நிகிலா மூலம் கதிரின் மூல கதை அனைத்தையும் அறிந்துகொண்ட ஆனந்தி , தினகரனை கொண்டு கதிரை குழப்பி விடுகிறாள்.

ஆனந்தியின் திட்டப்படியே எல்லாம் நடக்க, கதிரும் போலீசில் சிக்க, நிகிலாவும் உதய்யும் காதலித்து திருமணம் செய்கின்றனர். ஆனந்தியின் திட்டம் தவறிய இடம் பூங்குழலி தான். கதிர் போலீசில் சிக்கிக் கொண்டால் ,பூங்குழலி ஆதரவற்று இருப்பாள். அவளைக் கொலை செய்து அந்தப் பழியை தினகர் மீது போட்டு விடலாம் என்று எண்ணிணாள். ஆனால், நிகிலா , உதய்யிடம் கூறி அவர்கள் அரண்மனையிலேயே தங்கவைத்து விட்டாள் . பூங்குழலி எங்கு இருக்கிறாள், என்பதை

உதய்யும் நிகிலாவும் யாரிடமும் கூறவில்லை .

நிகிலா யார் என்பதை அறியாத உதய்யின் தாய், நிகிலாவை நிராகரிக்க , ஆனந்தி, கார்குழல் கோதையை ரகசியமாய் சந்தித்து பாரம்பரியங்களை விளக்க,கார்குழல் கோதை , நிகிலாவை ஏற்றுக்கொள்கிறாள். கோதை, ஆனந்தியின் சந்திப்பின் பொழுது தான்.

பூங்குழலி, ஆனந்தியின் கண்ணில் சிக்குகிறாள்.

ஆனந்தி, பொன்னியை விலைக்கு வாங்கி, கோதைக்கு ஸ்லோ பாய்சன் வைத்து பூங்குழலி மீது பழி போட திட்டமிட்டாள் . அந்த சமயத்தில்தான் சபரியும் சூரியும் அவள் ஆட்டத்திற்கு இடையூறாய் நுழைய , சபரி யாரென்பதை ஆனந்தி ஆராய்ந்து தெரிந்து கொள்கிறாள். பொன்னியை கொண்டு பூங்குழலியை கொலை செய்ய திட்டம் தீட்டுகிறாள். பூங்குழலி அருந்தும் பாலில் விஷமும் கலக்கிறாள்.பூங்குழலியை கொன்ற பழியை சபரியின் மீது போடலாம் என்று நினைக்கிறாள் .ஆனால் அந்த விஷம் கலந்த பால், தவறுதலாக வேறொரு வேலைக்காரி உதயகிருஷ்ணாவிற்கு அளிக்க ,பூங்குழலி தப்பிவிட்டாள்.

சூரி சிபிஐ என்பதை அறிந்து கொண்ட ஆனந்தி அவனை ஆள் வைத்து தீத்துகட்ட திட்டமிடுகிறாள்.சூரியும் தப்பிவிடுகிறான்.

இறுதியாக சூரி, சபரி இருவரையும் முன்தினம் மாலை வாக்கிங் முடித்து வரும்பொழுது, பேய் ,மாயம் ,மந்திரம் என்ற பெயரில் கொலை செய்ய திட்டமிடுகிறாள். வேலன் மற்றும் சாமியின் உதவியால் இருவரும் தப்பிக்கின்றனர் .

ஆனந்தி அனைத்தையும் கூறி முடிக்க,

'' அம்.....மா..... நீயா இப்படி, எல்லா.... செஞ்ச. ……? எப்பயோ நடந்த ஒரு பிரச்சினைக்கு இப்ப வரைக்கும் பகையை தொடர்ந்துட்டு இருக்க !'' நிகிலா உடைந்து அழுதபடியே தரையில் அமர்கிறாள். உதய், அவளை தூக்கிப்பிடித்து தோளில் சாய்த்துக்கொண்டு ஆறுதல் கூறுகிறான்.

சூரி, ஆனந்தியையும் அவளுக்கு உதவி செய்த பொன்னியையும் காவல் துறை வாகனத்தில் ஏற்றி செல்கிறான்.

இரண்டு மூன்று வாரங்களில் காவல்துறை மற்றும் நீதித்துறையின் நடைமுறைகள் எல்லாம் முடிந்து குற்றங்களும் நிரூபிக்கப்பட்டு ஆனந்தியும் பொன்னியும் சிறையில் அடைக்கப்படுகின்றனர்.

சூரியின் உதவியுடன் கதிரும் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டு இருந்தான்.

" எங்களுக்கு இந்த ஜமீனோட வாரிசுங்கற அந்தஸ்து, பணம் ஏதுவும் வேண்ட உங்களோட அன்பு, ஆதரவு மட்டும் போதும் ." கதிர் ,உதய் கிருஷ்ணாவிடம் கூறிவிட்டு தங்கை பூங்குழலியோடு விடைபெற்றான்.

" தேங்க்யூ மச்சான் வந்த வேலைய நல்லபடியா முடிச்சி கொடுத்துட்ட. " சபரி சூரியை கட்டியணைத்து நன்றி கூறுகிறான்.

"சூரி வந்த வேலை முடிஞ்சிருச்சீ ஆனா.... நீங்க வந்த வேலை முடியலையே?" உதய் , சபரியை பார்த்து கேட்க,

" என்ன வேல "சபரி சொன்னான்.

" சரியா போச்சு போங்க, மறுபடியும் முதலிலிருந்து ஆரம்பிக்கனுமா? " உதய் பொய்க் கோபத்துடன் கேட்டான்.

"இதுக்கு நான் பதில் சொல்லவா உதய்" சூரி கேட்டான்.
உதய் சரி என்று தலையசைக்க ,

"இந்த கேள்விய உங்க மாமியார் கிட்ட கேளுங்க, ஏன்னா மரகத வளரி அவங்க கிட்ட தான் இருக்கு ."

" என்ன அம்மாகிட்ட யா? " நிகிலா ஆச்சரியத்தோடு கேட்டாள்.

" உங்க குடும்பத்துக்குள்ளேயே தான் மரகத வளரி இருக்கு நீங்களா பார்த்து பேசி தீத்துகோங்க ." சபரி, உதயின் கையைப் பற்றி குலுக்கியபடியே கூறிவிட்டு சூரியுடன் கிளம்பினான்.

சூரியும் சபரியும் சென்னை வந்து இறங்கினர் .

தினகர் இருவரையும் வரவேற்றான்.

" கதிர பார்த்தியா? " சபரி கேட்டான்.

" ம்ம....பார்த்தேன். அண்ணா ,தங்கச்சீ ரெண்டு பேரும் நல்லா இருக்காங்க. " தினகர் பதிலளித்தான்.

" டேய் அப்புறம் அத கைமாத்தியாச்ச?" சூரி கிசுகிசுப்பாய் தினகரிடம் கேட்கிறான்.
தினகர்
" மாத்தியாச்சு ...." என்று கூறியபடியே சபரி,சூரியின் கைகளில் ஆளுக்கு ஒரு சூட்கேஸை திணித்தான்.

*" டேய் மச்சான் ரொம்ப பயமா இருக்குடா மாட்டிக்கிட்டா என்ன பண்றது. " சபரி கூறினான்.*

*" கவலைப்படாதடா காந்தி தாத்தா பாத்துப்பாரு! " சூரி கையில் இருந்த பெட்டியை தட்டியவாறு கூற,சபரி நமுட்டு சிரிப்பு சிரிக்கிறான்.*

***சூரியின் புலன் விசாரணை***

*சூரி , நிகிலாவிடம் கதை கேட்டு முடித்ததுமே தினகரை கண்காணிக்க தொடங்கிவிட்டான். காவல்துறையின் நெருங்கிய நண்பர்கள் மூலம் தினகரை வேறொரு பொய்க் காரணம் கூறி கைது செய்து புதுக்கோட்டைக்கு அழைத்து வருகிறான். அங்கு வைத்து சூரி தினகரை நன்றாக கவனிக்க ,*

*" நிகிலாவோட அம்மாதான் எல்லாத்துக்கும் காரணம். அது மட்டும் இல்ல மரகதவளரியும் அவங்க வீட்ல தா பத்திரமா இருக்கு ."என்று தினகர் சூரியிடம் வாக்குமூலம் அளித்து விடுகிறான்.*

*" ஏய் உனக்கு எப்படி மரகத வளரி பத்தி தெரியும்?". சூரி கேட்டான்.*

*" நிகிலா அம்மா ஆனந்தி தான் கதிர கஞ்ச கேஸ்ல போலீஸ்ல மாட்டி விட்டாங்க. இது எனக்கு மொதல்ல தெரியாது. கதிர் போலீஸ்ல மாட்டிக்கிட்டான்கிரத நிகிலா கிட்ட சொல்லி உதவி கேக்க, நிகிலா வீட்டுக்கு போன , அங்க தான் நிகிலாவோட அம்மாவும் அப்பாவும் இந்த விஷயத்தைப் பத்தி பேசிகிட்டு இருந்தங்க.நான் கொஞ்சம் உஷாராகி மறஞ்சி நின்னு அவங்க பேசறத கேக்க ஆரம்பிச்சேன் .*

*கதிர பத்தி பேசி முடிச்சுட்டு,*

*ஏதோ மரகத வளரி அது இதுன்னு பேசிகிட்டு இருந்தாங்க.அதோட மதிப்பு பல ஆயிரம் கோடினும் நிகிலாவோட அம்மா, அவங்க வீட்டுக்காரர் கிட்ட சொல்லிகிட்டு இருந்தாங்க .*

*அதக் கேட்டுட்டு நா அமைதியா திரும்பி வந்துட்ட, மரகத வளரிய அடிச்சா பல்லாயிரம் கோடி கிடைக்குனு திட்டம் போட்ட." தினகர் கூறிக்கொண்டே வரும்பொழுது சூரி இடைமறித்து*

*" அப்...போ .... உதய்க்கும் நிகிலாக்கும் மரகத வளரி நிகிலா அம்மா கிட்ட தான் இருக்குன்னு தெரியாதா. ? " என்றான்.*

*" தெரியாது ஆனா ,*

*அதுங்க இவங்களை விட பயங்கர கெட்டிங்க. கதிருக்கும் பூங்குழலிக்கும் ஜமீனோட வாரிசுங்கற அந்தஸ்தை கொடுக்கிற மாதிரி கொடுத்துட்டு , யாரோ சபரியாம் அவன் மூலமா வளரிய கண்டுபிடிச்சு அத லண்டன்காரனுக்கு வித்துட்டு , சபரி ,கதிர் ,பூங்குழலினு எல்லாரையும் போட்டுத் தள்ளிட்டு*

துபாய்ல செட்டில் ஆயிடுலானு பிளான் போட்டு இருக்காங்க.'' தினகர்.

'' அந்த பிளான் எப்படி உனக்கு தெரியும். ?''சூரி கேட்டான்.

" ஒரு நாள் கதிர் விசயமா உதய்ய பார்க்க
போய் இருந்தேன். தண்ணி அடிச்சுட்டு உட்கார்ந்திருந்தான்.இதா சமயமுனு நைஸ்ஸ வளரிய பத்தி பேச்சு கொடுத்த எல்லாத்தையும் உளறிக் கொட்டினான்.'' தினகர் கூறினான்.

எல்லா உண்மைகளையும் தெரிந்து கொண்டு சூரி பாபு அதன் பிறகு வழக்கை நல்ல முறையில் முடித்து வைத்தான். ஆனால் கதிர், பூங்குழலி, தினகர், சபரியின் வறுமை, ஆனந்தியின் அட்டகாசங்கள், நிகிலா மற்றும் உதய்யின் பேராசை ஆகியவற்றிற்கு சவுக்கடி கொடுக்கவே
உதய்யின் மியூசியத்தில் இருந்து விலை உயர்ந்த சில நவரத்தின கற்களை சபரி மற்றும் சூரி திருடினார்.அதோடு நில்லாமல் ஆனந்தி வீட்டிலிருந்த மரகத வளரியை யாருக்கும் தெரியாமல் எடுத்து மியூசியத்திற்கு உள்ளாகவே மறைத்து வைத்து விட்டனர்.

நவரத்தினங்களை விற்று வந்த பணத்தை சூரி, சபரி, கதிர், பூங்குழலி ,தினகர் ஆகிய ஐவரும் சரிபாதியாய் பிரித்துக் கொண்டனர்.

சுவாமியும் வேலனும் உதய்யின் பரம்பரையில் யாரோ தப்பித்தவறி செய்த புண்ணியத்தின் பலனால் கிடைத்த வரம்.

**எனக்கு தெரிந்த வரையில் மரக வளரி தொடரை சுவாரஸ்யத்துடன் நகர்த்தி சென்றுள்ளேன்.மரகத வளரியை தொடர்ந்து படித்து ஆதரவளித்த சகோ/சகிகளுக்கு என்னுடைய மனமார்ந்த நன்றி.**

**முற்றும்**

## FREETAMILEBOOKS.COM

***மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:***

*மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.*

***ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:***

*ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.*

***தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:***

*தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.*

*சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.*

***சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?***

*அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.*

*சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.*

*நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.*

*அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.*

*எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.*

***தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?***

*கூடாது.*

*ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.*

*அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.*

*அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.*

*வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை "Creative Commons" உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.*

*பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்*

*வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக*

உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்"-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

***FREETAMILEBOOKS.COM***

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

*PDF for desktop, PDF for 6" devices, EPUB, AZW3, ODT*

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Commons" உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்
2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://kaniyam.com
5. http://blog.ravidreams.net

***எவ்வாறு ஓர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?***

*இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.*

*உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்].*

*தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.*

*இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.*

*இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.*

*இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.*

*எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.*

*இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை "Creative Commons" உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.*

*http://creativecommons.org/licenses/*

*நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.*

*e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM*

*FB : https://www.facebook.com/FreeTamilEbooks*

*G plus: https://plus.google.com/communities/108817760492177970948*

*நன்றி.*

*மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.*

*முடிந்தால் அவர்களையும் "Creative Commons License"-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.*

*கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREE-TAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.*

***ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?***

*அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.*

*ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.*

*அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.*

***மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?***

*ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.*

*நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.*

***தவிர்க்க வேண்டியவைகள் யாவை?***

*இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.*

***எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?***

*நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.*

## கணியம் அறக்கட்டளை

**தொலை நோக்கு – *Vision***

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – *Mission***

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**தற்போதைய செயல்கள்**

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com/
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

**கட்டற்ற மென்பொருட்கள்**

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition

- *விக்கிமூலத்துக்கான எழுத்துணரி*
- *மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle*
- *விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்*
- *மின்னூல்கள் உருவாக்கும் கருவி*
- *உரை ஒலி மாற்றி – இணைய செயலி*
- *சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி*
- *FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி*
- *FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி*
- *WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்*
- *FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்*

**அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்**

- *விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்*
- *முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்*
- *தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்*
- *கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்*
- *கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்*
- *கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்*
- *மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி*

- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

### வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக

வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

## நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

***Kaniyam Foundation***

***Account Number : 606 1010 100 502 79***

***Union Bank Of India***

***West Tambaram, Chennai***

***IFSC – UBIN0560618***

***Account Type : Current Account***

***UPI செயலிகளுக்கான QR Code***

BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**

**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

*குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.*

*Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.*